Registered No. M. 2330

'SIDDHANTHAM
Vol. 34—No. 10



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 34 | பிலவ ஐப்பசி 1961 அக்டோபர் | இதழ் 1

உள்ளுறை



பத்திராசிரியர் : புலவர் - முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.

உதவிப் பத்திராசிரியர் : மு. நாராயணசாமி

சைவ சித்தாந்த மகா சமாஜம்

14, வாரன் ரோடு, மயிலாப்பூர், சென்னை-4

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி அணா

# செய்திச் சுருக்கங்கள்

திரு. வி. க. மணிமண்டபத் திறப்பு விழா : தமிழ்ப் பெரியார் திரு. வி. கலியாணசுந்தரனார் திருவிய ஸ்ரீபால சுப்பிரமணிய பக்தஜன சபையின்கண் (3, மோபரீஸ் சாலை, இராயப்பேட்டை) திரு. வி. க. அவர்களின் நினைவுச் சின்னமாக எழுப்பப் பெற்றுள்ள மணிமண்டபத் திறப்பு விழா, 21-9-61 வியாழக்கிழமை யன்று மாலை 6 மணியளவில் மிகவும் சிறப்புற நிகழ்ந்தது. வழிபாட்டுக்குப் பின்னர் மணிமண்டபக் குழுத் தலைவர்-தமிழவேள்-சர். பி. டி. ராஜன், எம். எல். சி. அவர்கள் வரவேற்புரை வழங்கினார்கள். மணிமண்டபச் செயலர்-திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள், மணிமண்டப அறிக்கையை வாசித்தார்கள். தமிழ் மாநில உள்துறை அறநிலைய அமைச்சர் கனம். எம். பக்தவத்சலனார் அவர்கள், விழாவிற்குத் தலைமை தாங்கி, மணிமண்டபத்தைத் திறந்து வைத்தார்கள். டாக்டர் - மு. வரதராசனார் எம்.ஏ., எம்.ஓ.எல்., பிஎச்.டி., அவர்களும், திருமதி. நீலாவதி ராமசுப்பிரமணியம் அவர்களும், திரு. வி. க. அவர்களின் அரும் பெரும் பண்பு நலங்கள் குறித்து விளக்கிச் சொற்பொழி வாற்றினார்கள். தர்மரக்ஷாமணி ஸ்ரீ கே. பால சுப்பிரமணிய ஐயர், பி.ஏ.,பிஎல்., எம்.எல்.சி. அவர்கள், அனைவருக்கும் நன்றியுரை கூறினார்கள். ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையில் உள்ள முருகப் பெருமான்மீது மகாகவி சுப்பிரமணிய பாரதியார் பாடிய பாடல், ஔவை திரு. டி. கே. ஷண்முகம் அவர்களின் இளம் புதல்வனால் அனைவர் உளமும் மகிழுமாறு அழகுறப் பாடப் பெற்றது. தமிழன்பர்கள் பலரும் பெருந்திரளாக வந்திருந்து விழாவைச் சிறப்பித்தனர்.

புரசைத் திருநெறிக் கழகம் 8-ம் திங்கள் வழிபாடு :— தொண்டை நன்னாட்டின்கண் உள்ள சிவன் கோயில்கள் 32-ல், 20, 21, 22, 23-வது தலங்களாகிய திருவொற்றியூர், திருவலிதாயம், வடதிருமுல்லை வாயில், திருவேற்காடு ஆகிய தலங்களிலும் திருநின்றவூர்த் தலத்திலும் 22-10-61 அன்று நடைபெறவுள்ளது. வழிபாட்டன்பர்கள், அன்றுகாலை 6 மணிக்குச் சென்னைப் புரசை, வைக்கோற்காரன் தெருவிலுள்ள வேம்படி விநாயகர் கோயிலிலிருந்து பேருந்தூர்தி (பஸ்) மூலம் செல்ல ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

Reg. M. 2330

உ
சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியைஉள் நாடு

மலர் 34 | பிலவ ஐப்பசி 1961 அக்டோபர் | இதழ் 10

## இலக்கணத்திற் கற்பனைகள்

(முருகவேள்)

(முற்றொடர்ச்சி : மலர் 34, இதழ் 9, பக்கம் 321)

ஒன்றொழி பொதுச் சொல் : சொற்கள் 'வெளிப்படை' என்றும் 'குறிப்பு' என்றும் இருவகைப்படும் என்பதனை மேலே கண்டோம். குறிப்புச் சொற்களாவன : இருதிணை ஆண் பெண்ணுள் ஒன்றனை யொழிக்கும் பொதுச் சொல்லும், வலித்தல் மெலித்தல் முதலிய ஒன்பது விகாரச் சொல்லும், இடக்கர் அடக்கல் மங்கலம் குழூஉக்குறி என்னும் மூவகைத் தகுதி வழக்குச் சொல்லும், ஆகுபெயர் அன்மொழித்தொகை வினைக்குறிப்புச் சொற்களும், முதற் குறிப்பு தொகைக் குறிப்புச் சொற்களும் பிறவுமாம். இதனை,

"ஒன்றொழி பொதுச்சொல், விகாரம், தகுதி
ஆகு பெயர், அன் மொழி, வினைக் குறிப்பே
முதல், தொகைக் குறிப்போடு இன்ன பிறவும்
குறிப்பில் தரும்மொழி; அல்லன வெளிப்படை"

எனவரும் நன்னூற் சூத்திரத்தால் உணரலாம். இவற்றுள் ஒன்றொழி பொதுச் சொல்லாவது: 'ஆயிரம் மக்கள் பொருதார்' என்புழி, ஆண் பெண் என்னும் இருபாற்கும் உரிய மக்கள் என்னும் பொதுச்சொல், பொருதார் என்னும் வினைச்சொல்லின் குறிப்பாற் பெண்மக்களை விலக்கி, ஆண் மக்களை மட்டுமே சுட்டி நின்றாற் போல்வது.

"பெயரினும் தொழிலினும் பிரிபவை யெல்லாம்
மயங்கல் கூடா; வழக்குவழிப் பட்டன"

என்னும் நூற்பாவால், "உயர்திணைக் கண்ணும் அஃறிணைக் கண்ணும் ஆண் பெண் என்னும் இருபாற்கும் உரிய பொதுச்சொற்கள், தம்மை யடுத்து வரும் பெயர்ச் சொல் வினைச்சொற்களால் தமக்குரிய இருபால்களுள் ஒன்றனை யொழித்து, மற்றொன்றினைக் குறிப்பான் உணர்த்தி வரும்" எனத் தொல்காப்பியர் இது குறித்து விதி வகுத்தருளி யுள்ளார். இதனைத் தழீஇ, உரையாசிரியர்கள் தம உரைப் பகுதிகளின் இடையே 'இப் பெயர் ஈண்டு ஆணொழித்து நின்றது' 'பெண்ணொழித்து நின்றது' என ஆங்காங்கு இலக்கணக் குறிப்புக்கள் எழுதிச் செல்வர்.

"பெறுமவற்றுள் யாமறிவ தில்லை; அறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற"

என்னும் திருக்குறள் உரையின்கண் ஆசிரியர் பரிமேலழகர், "அறிவறிந்த என்றதனால் மக்கள் என்னும் பெயர் பெண் ணொழிந்து நின்றது" என எழுதி யிருத்தல் காணலாம். இவ்விலக்கணக் குறிப்பினை உள்ளத்திற் கொண்டு, தெள்ளு தமிழ்ப் பெருங்கவிஞர் பெருமான் ஆகிய துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், ஓர் அரிய இனிய பாடலின்கண் அதனைக் கவிதைநலம் திகழவும், கற்பனை நயம் பொலியவும் அழகுறச் சுட்டிக் காட்டி மகிழ்விக்கின்றார்!

சிவப்பிரகாச சுவாமிகள் 'திருமுதுகுன்றம்' எனப் பெயரிய விருத்தாசலத்தில் பலகாலம் வதிந்திருந்தவர். அங்கிருந்தபோது அவர் இயற்றிய நூல்கள் பல. அவற்றுள், விருத்தாசலத்தில் உள்ள இறைவியின் திருப்பெயரால் இயற்றிய பெரியநாயகியம்மை கட்டளைக் கலித்துறை என்னும் நூலும் ஒன்று. அந் நூலின்கண், "பெண்கள் அறிவன அறிதற்குரியரல்லர் என்னும் கருத்தால் 'அறிவறிந்த மக்கள்' என்னும் தொடர் பெண்ணொழித்து நின்றது எனச் சிலர் கூறுவர். பெண் குழந்தைகளைப் பெறுதலினும் ஆண் குழந்தைகளைப் பெறுதலே நலம் பயப்பதாகும் என எண்ணிக்கொண்டு, 'நீவிர் ஆண் குழந்தைகளையே மிகவும் பெறுக' என்று ஒருசில பெரியோர்கள் மணமக்களுக்கு வாழ்த்துரைப்பர். பெண் குழந்தைப் பேற்றை இழிவென

மதிக்கும் இத்தகையவர்கள் நாணமுறும்படி, மலையரசன் நின்னை மகளாகப் பெருந்தவஞ் செய்து பெற்று எய்தற்கரிய சிறப்பை யெல்லாம் அடைந்துய்ந்தான்" எனப் பெரியநாயகியம்மையின் பெருமையைப் புகழ்ந்து பரவும் கருத்தமையச் சிவப்பிரகாசர்,

"கற்றூர் அறிகுவர் மக்கள்தம் பேறெனக் கட்டுரைத்த
சொற்றூன் ஒருபெண் ணேழிந்தது என்பாரொடு, தொல்லுலகில்
நற்றூண் மகப்பெறு கென்றூசி சொல்பவர் நாண,உனைப்
பெற்றூன் மலையரையன் குன்றை வாழும் பெரியம்மையே"

என்னும் அழகிய பாடலைப் பாடித் துதித்து மகிழ்கின்றூர்! இச்சிறந்த பாடலாற் சிவப்பிரகாச சுவாமிகள் போன்ற புகழ்மிக்க பெருங்கவிஞர்கள் எல்லோருங்கூட, ஆசிரியர் பரிமேலழகர் இயற்றிய திருக்குறள் உரையினை எவ்வளவு நுணுகிக் கற்றுணர்ந்து செவ்விய புலமைநலம் அடையப் பெற்றிருந்தனர் என்பது முதலிய பல உண்மைகளை நாம் அறிந்து கொள்ளலாம்.

மங்கல வழக்கு : உலக வாழ்க்கை துயரம் நிறைந்தது! துயரமே அறியாக் குழவிப் பருவத்தினராகிய திருஞான சம்பந்தர் தாம் அருளிச் செய்த முதல் திருப்பதிகத்திலேயே "துயர் இலங்கும் உலகு" என இவ்வுலகின் இயல்பினைச் செவ்விதிற் குறிப்பிடுகின்றூர். 'இன்பம்' 'துன்பம்' என்னும் சொற்களின் அமைப்பே, உலகியலியல்பைக் குறித்துப் பழந்தமிழ்ப் பெருமக்கள் கொண்டிருந்த கருத்தைப் புலப்படுத்துகின்றது. 'இல்' என்பதன் அடியாக, இவ்வுலகில் இல்லாதது என்னும் பொருளில் 'இன்பம்' என்னும் சொல்லும்; 'துன்' என்பதன் அடியாக இவ்வுலகில் நாம் அடைவது என்னும் கருத்தில் 'துன்பம்' என்னும் சொல்லும் தோன்றின என்பர் அறிஞர். இவ்வுண்மையினை யுணர்ந்தே,

'இன்னு தம்மஇவ் வுலகம்
இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே"

எனப் புறநானூற்றுப் புலவர் ஒருவரும் அருளிச் செய்தனர். அதன்படியே இன்னுதனவாய் அமங்கலமான உலகியல் நிகழ்ச்சிகளையும், இனியவாய் மங்கலமான

நிகழ்ச்சிகள் போல மனத்தின்கண் கருதிக்கொண்டு, ஒருவாற்ருன் ஆறுதல் அடைந்து மகிழ்ந்து வாழும் நெறியே மங்கல வழக்கு எனலாம். தமது வாழ்க்கையில் அமங்கல நிகழ்ச்சிகள் நேராமல் யாவும் மங்கலமாகவே நிகழ்தல் வேண்டும் என மனிதர் அனைவரும் விரும்புதல் இயற்கையாகலின், அமங்கலத்தையும் மங்கலம் போல வைத்துக் கூறும் வழக்கு (Euphemism) எல்லா மொழிகளிலும் உண்டு. அழகற்றவரை 'நிரம்ப அழகியர்' என்றும், கண் இழந்தவரைக் 'கண்ணப்பர்' என்றும், அன்பு காரணமாக வழங்குதல் போல்வன மங்கல வழக்கு ஆகும்.

" தகுதியும் வழக்குந் தழீஇயின ஒழுகும்
பகுதிக் கிளவி வரைநிலை இலவே "

எனவரும் தொல்காப்பிய நூற்பாவின்கண், " தகுதி என்பது அப்பொருட்குரிய சொல்லாற் சொல்லுதல் நீர்மை அன்று என்று அது களைந்து தக்கதோர் வாய்பாட்டாற் கூறுதல். அது செத்தாரைத் துஞ்சினர் என்றலும், சுடுகாட்டை நன்காடு என்றலும், ஓலையைத் திருமுகம் என்றலும், கெட்டதனைப் பெருகிற்று என்றலும் என இத் தொடக்கத்தன " எனச் சேனவரையர் இம்மங்கல வழக்குப்பற்றி விளக்கம் செய்திருத்தல் காணலாம். கொடிய நஞ்சுடையதனை நல்ல பாம்பு எனவும், காராட்டை வெள்ளாடு எனவும் கூறுதல் போல்வன வெல்லாம் மங்கல வழக்கே என இலக்கண நூல்கள் கூறும். இதனைக் காதல் கைம்மிக்கு நிலவொளி நோக்கிப் புலம்பும் பெண்ணொருத்தியின் கூற்ருக வரும்,

" அங்கம் அதில்நஞ்சு இருத்தினேன்
அங்கம் அல்லா அவிர்சடைமேல்
தங்க, நினைவைத் திட்டதநின்
கொடுமை கருதித் தான்அன்ருே?
பொங்கும் அமுத கலைஎன்ன
நின்னைப் புகறல் வெண்திங்காள்!
இங்கு மனிதர் காராட்டை
வெள்ளாடு என்ப தொக்குமால் "

என்னும் பிரபுலிங்கலீலைச் செய்யுளில், நம் சிவப்பிரகாச

சுவாமிகள் அழகுற எடுத்தாண்டிருத்தல் அறிந் தின்புறற் பாலது. இம் மங்கல வழக்கினை நினைப்பிக்கும் வகையில்,

"சேணுர் திருவுடைச் செல்வரைக் காணிற் சிறப்புச் செய்து
பேணு தவருமுண் டோ? புவி மீதிற் பெருத்தெழுந்து
சோணு சலவடி வாய்வெளி யாய்நின்ற சோதிதனைக்
காணுத கண்ணனைச் சொல்வர்சேந் தாமரைக் கண்ணான் என்றே"

எனத் திருவருணைக் கலம்பகத்தின் கண், சைவ எல்லப்ப நாவலர் அருளிச் செய்திருக்கும் பாடலும், ஈண்டு இயைபு பற்றி எண்ணி யுணர்ந்து கொள்ளுதற்கு உரியது.

வினைச்சொல்: ஆசிரியர் தொல்காப்பியர் வினைச்சொல் குறித்து வகுத்துள்ள இலக்கணம் பெரிதும் வியந்து போற்றற்பாலதா யுள்ளது. சொற்களுட் பெயரும் வினை யுமே மிகவும் முதன்மை வாய்ந்தவை என்பதனை முன்னர்க் கண்டோம். பெயர்ச்சொல் அடியாக வினைச் சொற்களும், வினைச்சொல் அடியாகப் பெயர்களும் தம்முள் ஏற்றபெற்றி தோன்றும். வினைச்சொற்கும் பெயர்ச் சொற்கும் இடையேயுள்ள வேறுபாட்டினை,

"வினைஎனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்"

எனத் தொல்காப்பியம் விளக்குகின்றது. முருகனை-முருகனல்-முருகனுக்கு என்றாற்போலப் பெயர்ச் சொற்கள் வேற்றுமை யுருபுகளை ஏற்றுவரும். வினைச் சொற்கள் வேற்றுமை யுருபுகளை ஏற்பதில்லை. வந்தான் - வருகின்றான் - வருவான் - என்றாற்போல வினைச்சொற்கள் காலம் காட்டிவரும். பெயர்ச் சொற்கள் காலம் காட்டும் இயல்புடையன அல்ல. எனவே, வினைச் சொற்கள் வேற்றுமை யுருபுகளை ஏலாமல், காலங்காட்டிவரும் இயல்புடையன என்பது இந்நூற் பாவின் திரண்ட பொருள்.

இனி, இதனைக் கூர்ந்துநோக்கின் வேறொரு சிறந்த பொருளும் இதன்கண் அமைந்திருத்தல் காணலாம்! நாம் செய்யும் ஒவ்வொரு செயற்கும் அதற்குரிய பயன் ஒருதலை யாக உண்டு. நற்செயல்புரிவோர் அதற்குரிய பயனாகிய நன்மையையும், தீச்செயல் புரிவோர் அதற்குரிய பயனாகிய தீமையையும் அடைந்தே தீருவர். 'வினை' எனுஞ் சொல்

செயலையும், அதன் பயனையும், அப்பயனைத்தரும் தெய்வத்தையும் முறையே குறிக்கும். அவரவர் செயலுக்கு ஏற்பப் பயன்களை எய்துவிக்கும் பால்வரை தெய்வமானது (தொல் - சொல் - 57); வினைப்பயன்களை எய்துவிக்குங்கால், செல்வர் வறியர் கற்றோர் கல்லார் உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்பனபோன்ற வேற்றுமைகளைச் சிறிதும் கருதுவதில்லை. வினைப்பயன் வினை செய்தோரை அடைந்தே தீரும். ஆயினும், வினைப்பயன்கள் ஒருபோழ்தத்தேயோ உடனடியாகவோ அன்றி, அவ்வவற்றிற்குரிய காலங்களிலேயே முறைப்படி வந்தெய்தும்.......எனப் பிறிதொரு சிறந்த தத்துவநூற் பொருளும் இந்நூற்பாவின்கண் அமைந்து விளங்குதல், தமிழிலக்கணத்தின் தனிப்பெருஞ் சிறப்பியல்பிற்குச் சான்றாகும் !

முன்னிலை ஏவல் வினைச்சொல் : வினைச்சொல் வகைகளுள் ஏவல் வினைச்சொல் என்பது ஒன்று. ஏவல் என்பது கட்டளையாகலின், நடவாமடி சீவிடு... என்றாற் போலக் கட்டளை இடுவன ஏவல் வினைச் சொற்கள் எனலாம். ஏவல்வினைச்சொற்கள் முன்னிலையிடத்திற்கு மட்டுமே யுரியது, முன்நின்றிருப்பானை மட்டுமே நாம் ஏவுதல் இயலுமாகலின். ஓ ஐ ஆய் என்பன முன்னிலை ஏவல் ஒருமைக்கும் இர் ஈர் மின் என்பன முன்னிலை ஏவற்பன்மைக்கும் விகுதிகள் ஆகும்.

" செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகிடன் உடைத்தே "

என்னும் தொல்காப்பியச் சூத்திரப்படி, நடவாய் வாராய் உண்ணாய் தின்னாய் எனவே வருதற்குரிய ஏவல்வினைச் சொற்கள், முன்னிலை ஒருமை ஏவல் விகுதியாகிய 'ஆய்' ஈறுகெட்டு, நட வா உண் தின் எனவும் வரப்பெறும். எனவே இந்நூற்பாவின்படி, நடந்தான் வந்தான் என்பவற்றின் வினை முதனிலைகளாகிய 'நட' 'வா' என்னும் வினைப் பகாப்பதங்கள் வேறு; நடவாய் வாராய் என்னும் முன்னிலை ஒருமை ஏவல் வினைச்சொற்களின் 'ஆய்' ஈறு கெட்டு 'நட' 'வா' எனவரும் ஏவல்வினைச் சொற்கள் வேறு என்பது பெறப்படும்.

இனி, இந்நூற்பாவுக்கே வேறொரு பொருளும் உண்டு. அப்பொருள் கொள்ளுபவர் நச்சினார்க்கினியர். 'செய் யாய்' என்னும் சொல்லே 'செய்யற்க' என எதிர்மறைப் பொருளையும், 'செய்க' என உடன்பாட்டுப் பொருளையும் உணர்த்திவரும். உடன்பாட்டுப் பொருள் தருங்கால் செய் + ஆய் எனப் பிரித்தல் வேண்டும். எதிர்மறைப் பொருள் கொள்ளுங்கால் செய் + ஆ + ஆய் எனப் பிரித்து, இடைநின்ற எதிர்மறை ஆகார இடைநிலை கெட்டுப் புணர்ந்ததாகக் கொள்ளல்வேண்டும்.

இன்னோரனைய இலக்கண நுட்பங்களை விளக்குதல் ஈண்டைக்கு நம் கருத்தன்றாயினும், ஆசிரியர் நச்சினார்க் கினியர் நுணுகி யுணர்ந்து கூறியுள்ள கருத்தொன்றினை ஈண்டுக் குறிப்பிடுதல் நலம் பயக்கும். "உண்ணாய் என்ப தும் உண் என்பதும் தம்மிற் பொருள் வேறுபாடு உடை யன. உண் தின் என்பன முதலிய முன்னிலை ஏவல்கள், உயர்ந்தான் இழிந்தானை ஏவுதற்கண் வரும். உண்ணாய் தின்னாய் என்பன உடம்பாட்டின்கண் வேண்டிக்கோடற் பொருண்மைக்கண்வரும்" என நச்சினார்க்கினியர் விளக்க வுரைக் குறிப்பு வரைந்திருத்தல் பிறர் நுனித்துணர்ந்து கூறாத தனிச் சிறப்பான கருத்தாகும்.

'இழிந்தானை உயர்ந்தான் ஏவும் கட்டளைச் சொற்கள் எல்லாம் மிகச்சிறிய (ஓரசைச்) சொற்களாகவே இருக்கும். ஆனால் உயர்ந்தானையோ ஒப்புடையானையோ வேண்டிக் கொள்ளும் முறையில்வரும் உணர்ச்சியியற் சொற்களெல் லாம் சிறிது நீண்டேயிருக்கும்'* என இஞ்ஞான்றை மொழிநூலறிஞர்கள் ஆராய்ந்து கூறும் உண்மையை நச்சி னார்க்கினியர் பன்னூற்றாண்டுகட்கு முன்னரே யுணர்ந்து

---

*"It may be said that short words are generally used for command, as in *help*! (not *assist me !*) go!, etc. A word is sometimes lengthened in order to obtain an emotional effect, as when *splendid* is lengthened into *splendidious* in slang. *Aggravate* better expresses the sense of *vex* than *vex* itself. *Multitudinous*, *multifarious*, and *flabbergast* are 'mouth-filling' words that have an emotional value which will not easily attach itself to their substitutes."—V. K. Gokak, The Poetic Approach to Language, 18.

மிக எளிதே இயல்பாகக் குறிப்பிட்டிருத்தல், அவர்தம் நுண்மாண் நுழைபுலனை விளக்குகின்றது.

இவை எங்ஙனமாயினும், ஈண்டுக் குறிக்கப்படுதற்குரிய செய்தி, முன்னிலை ஏவல் வினை என்னும் இவ்விலக்கணக் குறியீட்டினை, மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் தாம் இயற்றிய தளத்தூர்க் கோவை என்னும் நூலில்,

" நன்னிலை யேசிற்கும் மால்வேத நாயக நம்பிவெற்பிற்
பொன்னிலை வேல! தழைஎன்று கூறிய போதுவகை
என்?இலை எற்றனள் மோந்தனள் ஒற்றி. இயம்பியபேர்
முன்னிலை ஏவல் வினையா உணர்ந்தனள் முற்றிழையே "

எனவரும் பாடலிற் சிறந்த முறையில் திறம்பட எடுத்தாண்டுள்ளார் என்பதேயாகும்.

'தலைவனே! யான் தலைவியினிடம் சென்று, முதலில் நினது காதல் குறித்துக் கூறிவிட்டுப் பின்னர் நின்னுடைய கையுறையினைத் தரலாம் என்று எண்ணிக்கொண்டு, தழை......என்று சொல்லத் தொடங்கிய மாத்திரத்திலேயே, அதனைத் தன் கண்களில் ஒற்றியும் மூக்கினால் மோந்தும் இன்புற்று, அன்புடன் விரைந்து ஏற்றுக்கொண்டு; தலைவி பெருமகிழ்ச்சியினால் உடல் பூரித்து நின்றாள். தழை என்று யான் குறிப்பிட்ட பெயர்ச்சொல்லை யான் அவளைத் தழையாய்! (மகிழ்ச்சியினால் உடல் பூரிப்பாயாக!) என்னும் பொருளில், ' ஆய் ' ஈறு கெட்டுவந்த முன்னிலை ஏவல் வினைச்சொல்லாகக் கூறினேன் என உட்கொண்டு, தலைவி அவ்வாறு பெருமகிழ்ச்சி யுற்றாள் போலும் !' எனத் தோழி கூறுவதாக அமைந்தது இச்செய்யுள். இது சிவநெறிப் பெருந்திருவினராகிய ' மகா வித்துவான் ' மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள்,

" பாசத் தளையறுத் தாண்டுகொண் டோன்தில்லை அம்பலஞ்சூழ்
தேசத் தனசெம்மல் நீதந் தன,சென்று யான்கொடுத்தேன்.
பேசிற் பெருகும். சுருங்கும் மருங்குல் பெயர்ந்தரைத்துப்
பூசிற் றிலள்அன்றிச் செய்யா தனஇல்லை பூந்தழையே !"

என நம் மாணிக்கவாசகப் பெருமான் திருச்சிற்றம்பலக் கோவையாரில் "தழை விருப்புரைத்தல்" என்னும்

துறையாக அருளிச் செய்த திருப்பாடலைத் தழுவி அமைத்த சிறப்புடையதாகும்.

வியங்கோள் வினைச்சொல்: ஏவல் எனினும், வியங்கோள் எனினும் பொருள் ஒன்றே. ஆயினும் ஏவல்வினை வேறு, வியங்கோள் வினைவேறு. ஏவல்வினை முன்னிலைக் கண் மட்டுமே வரும். வியங்கோள்வினை இருதிணை ஐம்பால் மூவிடங்களிலும் வழங்கும்.

"கயவொடு ரவ்வொற் றீற்ற வியங்கோள்
இயலும் இடம்பால் எங்கும் என்ப"

என்பது நன்னூற் சூத்திரம். ஏவல்வினை கட்டளைப் பொருள் மட்டுமே யுணர்த்தும். வியங்கோள் வினையோ 'நின்று நிலைஇயர் நின் நாண்மீன்' என வாழ்த்தலும், 'நில்லாது படாஅச் செலீஇயர் நின் பகைவர் மீனே' என வைதலும், 'வருக உண்க செல்க' என விதித்தலும், 'போற்றி அருளுக நின் ஆதியாம் பாதமலர்' என வேண்டிக் கோடலும் ஆகிய பொருள்களில் வரும்.

ஆசிரியர் சிவஞான முனிவரின் பன்னிரு மாணவர்களுள் சிதம்பரநாத முனிவர் என்பவர் ஒருவர். அவர் இலக்கணத் துறையில் தனிச் சிறப்பாகப் பெரும் புலமை பெற்றிருந்ததன் காரணமாக, அவருக்கு இலக்கணம் சிதம்பரநாத முனிவர் என்றே பெயர் வழங்குவதாயிற்று. திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம் இயற்றிய ஆசிரியர் இவரே யாவர். அந்நூலில் இவர் பெண்ணையாற்றின் சிறப்பினைப் புனைந்து பாடுங்கால்,

"ஐந்திணை தோறும் சென்றப்
பொருள்தரும் வியங்கோள் போல
ஐந்திணை தோறும் சென்று
வளந்தரும் பெண்ணை யாறு"

என இவ் வியங்கோள் இலக்கணச் செய்தியை உவமை கூறிப் பாடிச் செல்கின்றார். 'வியங்கோள் வினைச்சொல்லானது ஆண் பெண் பலர் ஒன்று பல என்னும் ஐம்பால்களினும் சென்று வழங்குதல் போல, முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலை என்னும் ஐந்து திணைகளினும் சென்று பாய்ந்து பெண்ணையாறானது நடுநாட்டை வளம்

படுத்துகின்றது' என்பது இதன் பொருள். ஆற்றைப் பற்றிப் பாடிச் செல்லுங்காலும், சிதம்பரநாத முனிவரின் உள்ளம் இலக்கணத் துறையிலேயே படிந்து படர்ந்து சென்றுள்ளமை, மிகவும் வியந்து போற்றத் தகுவ தொன்றன்றோ!

ஆகுபெயர்: பெயர்களில் பலவகைகள் உண்டெனினும், அவை இயற்பெயர் ஆகுபெயர் எனப் பொதுவாக இரண்டு வகைப்படும். இயற்பெயராவது ஒரு பொருளுக்கு இயல்பாக அமைந்து வழங்கி வரும் பெயர். இயற்பெயர் எனினும் இயற்கைப் பெயரெனினும் ஒக்கும். ஒரு பொருளுக்கு இயல்பாக அமைந்து வழங்கி வரும் இயற்பெயரானது, அதனோடு தொடர்புடைய பிற பொருள்களுக்கும் ஆகிவருவது ஆகுபெயர். மக்களின் அறிவுஅனுபவம் கருத்து ஆகிய பலவும் வளர்ந்து செல்லுதலின் விளைவாகவே, ஒரு பொருளுக்கு ஏற்பட்ட இயற்பெயர் அதனோடு தொடர்புடைய பிற பொருட் பகுதிகளுக்கும் வழங்கத் தலைப் படுகின்றது. கருமை நிறத்தினைக் குறிக்க எழுந்த கார் என்னும் சொல், அதனையுடைய மேகத்தினையும், பின்னர் அது பெய்யும் காலத்தினையும், அதன் பின்னர் அக்காலத்தில் விளையும் நெல்லையும் முறை முறையே குறிக்கத்தலைப் பட்டது. மக்களின் வாழ்க்கையும் உணர்வும் படிப்படியே வளர்ந்து விரிவடையும் நெறி முறைகளை இஃதுணர்த்துவ தாகக் கொள்ளலாம். மேலே குறித்த வெளிப்படை குறிப்பு என்னும் இருதிறச் சொற்களுள், ஆகுபெயர் குறிப்புச் சொல் வகைகளுள் ஒன்றாக அமையும்.

> " பொருள்முதல் ஆறோடு அளவைசொல் தானி
> கருவி காரியம் கருத்தன் ஆதியுள்
> ஒன்றன் பெயரான் அதற்கியை பிறிதைத்
> தொன்முறை யுரைப்பன ஆகு பெயரே "

என இதன் இயல்பினை நன்னூல் இனிது வகுத்துணர்த்து கின்றது. தொல்காப்பியர் ஆகு பெயரினைக் குறித்துப் பெயரியலில் அல்லாமல், வேற்றுமை மயங்கியலில் விளக்கு கின்றார். ஒன்றன் பொருட்கண் பிறிதொன்று சென்று வழங்கும் இயல்பில், வேற்றுமை மயக்கமும் ஆகு பெயரும்

ஒப்புமையுடையன என்பது தொல்காப்பியர் கருத்து. இவ் ஆகு பெயர் என்னும் குறியீட்டினை,

> " உயிர் எனும்பெயர் இயங்குகாற்கு இயற்பெயர், உரைப்பில்
> அயலு றும்தனக்கு அப்பெயர் ஆகுபேர் ஆம்என்று
> இயல் உணர்ந்தவர் இயம்புவர், என்றெமக் கிறைவன்
> மயல் அறும்படி உணர்த்தினீஃ துரைத்தனன் மன்னே "

என வரும் பிரபுலிங்கலீலைச் செய்யுளில், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் எடுத்தாண்டிருத்தல் காணலாம். 'உயிர் என்பது பிராணவாயுவைக் குறிக்க எழுந்த இயற் பெயர். அது பின்னர்ப் பிராண வாயுவையுட்கொள்ளும் ஆன்மாவைக் குறித்தற்கும் ஆகிவந்ததனால், ஆன்மாவுக்கு உயிர் என வழங்கும் பெயர் ஆகுபெயர் என இலக்கணம் உணர்ந்தவர்கள் கூறுவர்' என்பது இச்செய்யுளின் பொருள். உயிர் என்னும் சொல்லை உய் என்னும் முதனிலையில் தோன்றியதாகக் கொண்டு, உய்தற்குரியது யாது அஃது உயிர் எனவும் கொள்ளலாம்.

தானியாகு பெயர்: ஆகுபெயர் வகைகளுள் தானி யாகுபெயர் என்பது ஒன்று. அஃது இடவாகு பெயர்க் குச் சிறிது மாறுபட்டது. 'ஊர் சிரித்தது' என்ற தொட ரிற்போல இடத்தின் பெயர் அதன்கண் உள்ள பொருள் களுக்கு ஆகிவருவது இடவாகு பெயர். இதற்கு மறுதலை யாக, இடத்தில் உள்ள பொருளின் (தானி) பெயர், அப் பொருள் உள்ள இடத்தை (தானம்) யுணர்த்துதற்கு ஆகி வருவது தானியாகு பெயர். 'நெஞ்சு நொந்தது' என்புழி இடத்திலுள்ள பொருளைக் குறிக்கும் 'நெஞ்சு' என்னும் பெயர், அஃது உள்ள இடமாகக் கருதப்பெறும் மார்பினை யுணர்த்தி நின்றது. இது போல்வனவே தானியாகுபெயர் எனப்படும். இதனை அறிவுறுத்துதற்குப் பொதுவாகப் பெரும்பாலும் இலக்கண நூல்களில் எடுத்துக்காட்டப் பெறும் தொடர் 'விளக்கு முரிந்தது' என்பது. 'விளக்கு' என்பது இருளிற் பொருள்களை விளக்கிக் காட் டும் சுடரொளிக்கே பெயர். அப்பெயர் அச்சுடரொளி இருக்கும் இடமாகிய அகலும் தண்டும் பிறவும் போல்வன வற்றைக் குறித்தற்கு ஆகிவந்தது. தானியாகு பெயரை

புணர்த்தக் கூறப்படும் இவ்வெடுத்துக்காட்டினை, ஆசிரியர் அருள்நந்தி சிவாசாரியர்,

"அறிவுடல் செறிவதை ஆன்மா
அணைதலால் ஆன்மா என்பர்
எரிசுடர் விளக்கு இருக்கும்
இடத்தையும் விளக்கென் றற்போல்
பொறிபுலன் கரணம் எல்லாம்
புலப்படும் அபேதம் ஆகிப்
பிறிதராத அறிவதான்மா
அறிபொருள் பின்னம் ஆமே!"

என வரும் சிவஞானசித்தியார் செய்யுளின் கண் அழகுற எடுத்தாளுகின்றார். 'சகலாகம பண்டிதர்' என விளங்கிய அப்பெருந்தகை, இலக்கணத் துறையிலும் பெரும்புலமை வாய்ந்தவராகத் திகழ்ந்திருப்பர் அல்லரோ? அவர் அருளிய இச்செய்யுளின் பொருள் வருமாறு :

'அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் ஆனந்தமயம் என்னும் ஐந்து கோசங்களும், முறையே காரணம் கஞ்சுகம் குணம் சூக்குமம் தூலம் என்னும் சரீரங்களாக ஆன்மாவுக்கு அமையும். இவை முறையே ஒன்றுக்கொன்று மிகவும் நுண்ணியதாக அமைந்திருக்கும். அசுத்த மாயையினின்று தோன்றும் இவ்வைந்தினுலும் பிணிப்புண்டு, ஆன்மாவானது இவற்றின் அகத்தும் புறத்தும் நின்று தொழிற்படும் (213). இவ்வைங்கோசமும் கொண்டு முறையே சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதம் என்னும் ஐந்தவத்தைகளை ஆன்மா அடையும் (220). ஆனந்தமய விஞ்ஞானமய கோசங்களில் நோற்பாவையை ஆட்டுபவர் போலவும், மனோமய பிராணமய கோசங்களில் மரப்பாவையை இயக்குபவர் போலவும், தூலமாகிய அன்னமய கோசத்தில் பெருந்தேர் ஓடுமாறு செலுத்துபவர் போலவும் ஆன்மா இயைந்து நின்று தொழிற்படுத்தி விளங்கும் (214). விளக்கு இருக்கும் இடத்தையும் விளக்கு எனத் தானியாகு பெயரான் வழங்குவதுபோல, ஐங்கோசங்களையும் இடமாகக் கொண்டு ஆன்மா பொருந்துதல் பற்றி அவற்றையும் ஆன்மா என்று உபநிடதங்கள் குறிப்பிடும்.

அதுபற்றி ஐங்கோசங்களையே ஆன்மா என்று எவரும் மயங்கற்க. விளக்காகிய சுடர் அஃதிருக்கும் இடத்தின் வேறுதல் போல, ஆன்மா தான் பொருந்தியிருக்கும் ஐங் கோசங்களினும் வேறுயதொரு பொருளேயாம்' (219) என்பது இச்சிவஞான சித்தியார் பாடலின் திரண்ட பொருள். (தொடரும்)

———

ஓம்

'தெய்வநெறிச் சங்க'த் தாபகரும் தலைவருமாகிய

ரிஷிகேசம், ஸ்ரீலஸ்ரீ - சுவாமி சிவானந்த சரஸ்வதியவர்கள்

தமது எழுபத்தைந்தாவது ஜயந்தி நாளில்

ஆங்கிலத்தில் வழங்கியருளிய

# அறவுரை*

சத்தியம் என்பது எப்போதும் மிக எளிமையதாக (குழப்பமற்றதாக) இருப்பது. காலதேச முதலியவற்றால் செலுத்தப்படும் மனத்தில்தான் இந்தக் குழப்பம் (மர்மம்) இருக்கின்றது. இந்திரியக் காட்சியைக் கடந்து மனம் இலங்கும்போது, அதன் அறிவு படிமுறையே விசாலமாகி, அகண்ட அறிவாய் முதிர்கின்றது.

'நான் இருக்கின்றேன்' என்னும் உணர்ச்சி, இறைவன் உனக்குள் இருப்பதால் ஏற்படுவதாகும். உலகில் உயிர்கள் இருப்பதாக நீ உணர்வதும், இறைவன் அதில் தங்கியிருப்பதாலேதான். மரணம் என்பதை நீ விரும்பாததற்குக் காரணம், உன்னுடைய உண்மை நிலையில் நீ என்றும் உள் பொருளா யிருப்பதேயாகும். பிறர் உன்னைப் பகைத்தலை நீ விரும்பாமைக்குக் காரணம், உன் வாழ்விற்கு உயிர்நாடியாக இருக்கும் அன்புடைமையே. அறியாமையை நீ நாடுவதில்லை. காரணம்: உனது உண்மை இயல்பு எல்லாவற்றையும் அறியும் அறிவாயிருப்பதே. துன்பத்தை நீ விரும்புவ

---

*மொழிபெயர்த்தவர் : திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள், சென்னை.

தில்லை. காரணம்: ஆன்மாவின் இயல்பு ஆனந்த பூரணமாயிருப்பதே. நீ இவ்வுலகில் வந்திருப்பது, உன்னை நீ அறிந்துகொள்வதற்கு; பிறரை உள்ளவாறு தெரிந்துகொள்வதற்கு; ஒருவர்க்கொருவர் உதவி செய்வதற்கு; உனக்கு வீடுபேறு கிடைத்தற்கு ஆவன புரிதற்கு. உன் உடம்பு உன்னைவிட்டு நீங்கி அழிந்த பிறகும் நீ அழிவதில்லை. உனது நல்வினை தீவினைகளுக்கு ஏற்றபடி புதியதோர் உடம்பைப் பெறுவாய்; பரஞான ஒளி கிடைக்கும்வரையில், அவ்வுடம்பிலிருந்துகொண்டு தொடர்ந்து வாழ்க்கை நடத்திவருவாய்.

சுதந்தரம் உன் பிறப்புரிமை—அடிமைத் தன்மையல்ல. மனதும் பஞ்சேந்திரியங்களும் உனது ஏவலாளர்கள்—எஜமானர்களல்ல. சத்தியம் உன் வாழ்க்கைக்கு வழிகாட்டி. மேல் நெறியில் செலுத்தவேண்டும்.—புலன்களின் கிளர்ச்சியன்று. ஒருமைப்பாடு காண்டல் உனது குறிக்கோள்—பிரிவினைகளல்ல. பிறர் கருத்தை அறிந்துகொள்ளலும் பிறர்பால் நல்லெண்ணம் உடைமையும் உனது நோக்கங்கள்—வெறுப்பும் பகைமையும் அல்ல. கடவுள் என்பது ஒரு வெறும் படாடோப உணர்ச்சியன்று; ஏதோ மதச் சார்பினைக் காட்டும் செயற்படாத வெறும் அடையாளமுமன்று. மனிதன் உள்ளத்தில் இருக்கும் பரிசுத்தத் தன்மையாய் இருப்பவரும் அவர்தான். கடவுள், ஓர் வெறும் கருத்தன்று; அவர் உன்னுடன் பெரிதும் ஒன்றியிருப்பவர்; எல்லாரையும் விட மிக நெருங்கிய தொடர்புடையவர். உனது ஆன்ம போத அறிவின் அஞ்ஞான சூழல்களால் அவரைச் சிறு பொருளாக நினைக்காதே. உன் மதவெறியினாலும், புலனறிவுக் கற்பிதங்களாலும் அவரை அவமானப்படுத்தாதே.

ஒரு மாதாகோவிலோ, அல்லது கோட்பாடோ உன்னை ஒரு மதப் பிரசங்கியாக உயர்த்திவைத்தால், நீ வானுலக வாயிலின் காவலாளன் என்று உன்னை நீ மதித்துக்கொள்ளாதே; "இதைச்செய் அதைச்செய்" என்ற கட்டளையை எவரும் கடவுளிடமிருந்து பெற்றிருக்கவில்லை. கடவுள் இருப்பின் தத்துவத்தை அவரருள்பெற்ற ஆன்றோர் பிறர்க்கு உணர்த்த முயலுகின்றனர். ஒருவன் மனித சமு

தாயத்துக்குச் சேவை செய்வதால் கடவுட்குச் சேவைசெய்பவன் ஆகிறான். பிற உயிர்களிடம் அன்பு செலுத்துபவன் கடவுளிடம் அன்பு செலுத்துபவன் ஆகிறான்.

இறைவன், வானத்தின்மீதுள்ளதோர் சிம்மாசனத்தில் கொலுவீற்றிருந்து ஏழை ஆன்மாக்கட்கு நீதித் தீர்ப்பளித்துக்கொண்டிருக்கும் தெய்வீகச் சுல்தான் அல்லன். அவன் உன் இதயத்துள் இருக்கின்றான்; பிறர் இதயங்களிலும் இருக்கின்றான். மனிதன் இதய சுத்தம் பெருகப் பெருக இறைவனைப்பற்றிய ஞானமும் முதிரும். மனிதனது மனச்சான்று என்னும் விளக்கின் வாயிலாய் அவனுக்கு இறைவன் நல் வழிகாட்டுகின்றான்.

உன் தலைவிதிக்குக் கர்த்தா நீயே. நீ அடையும் பயன் உன் கைவசத்திலேயே இருக்கிறது. உன் சொந்தமுயற்சி வலுவினால், உன்னுடைய வீடுபேற்றைச் சுறுசுறுப்புடனும், நிலை கலங்கா உறுதியுடனும் உழைத்துப் பெறுவாயாக.

நாடு சத்தியத்தை; நீ அதைக் காண்பாய். அதுபற்றி விசாரணைசெய்; உனக்கதன் தன்மை விளங்கும். சாதனம் செய்; நீ அநுபவம் பெறுவாய். தியானம் பண்ணு; உனக்கு அதன் அநுபூதி வாய்க்கும். தெய்வீக வாழ்க்கை நடத்து, உனக்குச் சாந்தியும் ஆனந்தமும் கிடைக்கும்.

உன் வாழ்க்கை யோக நெறியில் தொடர்ந்து இயங்குவதாக இருக்கட்டும். செய்வன திருந்தச் செய்தல் யோகம். பாசக் கட்டின்றிப் பணிசெய்தல் யோகம். தன்னல நாட்டமில்லாத சேவை யோகம். மனத்தின் சமநிலை யோகம். அறவொழுக்கம் நிறைநிலை யோகம். தியானமும் யோகம். உணர்வுகளின் ஒருமைச் சமநிலை யோகம், களங்கமற்ற பக்தியும் யோகம். ஞானோதயம் யோகம். அகண்ட அறிவுணர்ச்சியும் யோகம். வருவாய் இப்போதே. ஒரு யோகியாகு!

உங்கள் எல்லோரையும் இறைவன் ஆசிர்வதித்தருளுவானாக!

---

# திரு ஈங்கோய்மலை எழுபது*

திரு. மு. அருணாசலம், எம். ஏ.

பதினொன்றாந் திருமுறையில் நக்கீர தேவ நாயனார் செய்தனவாகப் பத்துப் பிரபந்தங்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பத்தினுள் ஒன்பதாவதாக இருப்பது திருமுருகாற்றுப்படை. சங்க காலத்துத் தொகை நூலாகிய பத்துப்பாட்டில் இது முதற்பாட்டாகத் தொகுக்கப் பெற்றிருக்கிறது. இதன் நடைக்கும் மற்ற ஒன்பது பிரபந்தங்களின் நடைக்கும் அதிக வேறுபாடு காணப்படுகிறது. இக்காரணத்தினாலும் வேறு சில காரணங்களாலும், திருமுருகாற்றுப்படையை இயற்றியவர் சங்க காலத்துப் புலவரான நக்கீரர் எனவும், மற்றப் பிரபந்தங்களைப் பாடியவர் அவரல்லர் எனவும் கருதப்படுகிறது. இவற்றைச் செய்தவர் அக்காலத்துக்குப் பிற்பட்டுத் தோன்றி, நக்கீரதேவ நாயனார் என்ற பெயரைத் தரித்திருந்த வேறொரு புலவராவார். திருமுருகாற்றுப் படையின் இறுதியில் காணப்படும் வெண்பாக்களைமட்டும் இவர் செய்தனவாகக்கொள்ளலாம்.

நக்கீரதேவ நாயனார் செய்தனவாக நாம் கருதக்கூடிய ஒன்பது பிரபந்தங்களின் வரிசையில் இரண்டாவதாயுள்ளது திரு ஈங்கோய்மலை எழுபது. ஈங்கோய்மலை என்ற தலம் சோழநாட்டிலே திரிசிராப்பள்ளிக்கு மேற்கிலுள்ளது. இந்தப் பிரபந்தம் ஈங்கோய் மலையின் வளத்தையும் அங்கே கோயில் கொண்டெழுந்தருளியுள்ள மரகதாசலேசருடைய பெருமையையும் கூறுகிறது. வெண்பாவினாலான எழுபது பாட்டுக்களையுடையது. எழுபது பாட்டுக்களால் நூல் செய்தல் பழைய இலக்கிய மரபு என்பதை 'ஐந்திணை எழுபது' என்ற பதினெண் கணக்கு நூலாலும், 'எழுபது பரிபாடல்' என்ற தொகை நூலாலும் அறியலாம். பிற்காலத்திலும் இந்த வழக்கு இருந்துவந்ததென்பதை 'ஏட்டெழுபது' முதலிய நூல்களால் அறியலாம். ஈங்கோய் மலை எழுபதிலுள்ள வெண்பாக்களின் முதலெழுத்துக்கள் அகர வரிசையில் அமைந்திருக்கின்றன.

---

*இது, 1941-ல் வெளிவந்த திருவாளர் - திரு. வி. உலகநாத முதலியார் அவர்களின் மணிவிழா மலரிலிருந்து எடுக்கப்பட்டது.

பதினொராந் திருமுறை இதுவரையில் பலரால் பல முறை பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. பதிப்பித்தோர் யாவரும் இந்தப் பிரபந்தத்தைப் பதிப்பிக்கும்போது இதில் சசு முதல் சுக வரையிலுள்ள பாடல்கள் ஒரு பிரதியிலும் கிடைக்கவில்லை எனக் குறிப்பிட்டு சஅ-ம் பாடலின் முதல் வரியில் ஒரு பாகத்தையும் சுஉ-ம் பாடலின் பின் மூன்று வரிகளையுமே அச்சிட்டிருக்கிறார்கள். சைவத்திருமுறையாகிய இந்த நூலில் இவ்வாறு பதினைந்து பாடல்கள் கிடைக்காமற் போனது சைவ மக்களுக்கு ஒரு பெருங் குறையாகவே இருந்தது. பதினொராந் திருமுறையிலுள்ள ஏனைய பிரபந்தங்களுக்கு ஏட்டுப் பிரதிகள் எளிதிலே கிடைத்தபோதிலும் இந்நூலின் பிரதிகள் கிடைப்பது அருமையாகவே இருந்தது.

சென்ற ஆண்டில் திருநெல்வேலியைச் சேர்ந்த இராசவல்லிபுரம் அழகிய கூத்த தேசிகர் அவர்களிடமிருந்து கிடைத்த செப்பறை மடத்து ஏடொன்றைப் பரிசோதித்த போது அதிலே திருக்கைலாய ஞானஉலா, *திருவாரூர்த் தியாகேசர் உலா, திருக்காளத்திநாதர் உலா, திருக்கழுக்குன்றத்துலா ஆகிய உலாக்களோடு பதினொராந் திருமுறைப் பிரபந்தங்கள் சிலவும் காணப்பட்டன. இவற்றுள் திருஈங்கோய்மலை எழுபது முற்றும் இருந்தது. இதுகாறும் கிடைத்

---

* இந்த மூன்று உலாக்களும் மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்களால் அச்சிடப்பட்டிருக்கின்றன. ஏட்டில் இவற்றின் பின் ‘செப்பறை உலா’ என்ற தலைப்புடன், காப்பும் அவையடக்கமுமாகிய இரண்டு வெண்பாக்கள் மட்டுமே எழுதப் பெற்றிருந்தன. உலா காணப்படவில்லை. அந்த வெண்பாக்கள் வருமாறு :—

1. சீர்பொருந்துஞ் செப்பறைவாழ் செல்வ னடியிணையில்
தார்பொருந்தும் ஒருலாச் சாற்றவே - நீர்பொருந்தும்
போதங்க மன்னவரும் பூவைவடி வாள்பயந்த
மாதங்கத் தன்னைநினை வார்.

2. தூசொலிப்போன் என்றறிந்தும் தூயவுவர் கண்டுசிவ
நேசனென்றே எண்ணும்வஞ்சி நீதனைப்போல் - ஆசிலா
முத்தர்களிந் நூலை முனியார் முனிவில்லா
அத்தனருட் சீரைவைத்த லால்.

நிராத பதினெந்து பாடல்களும் அதில் பூர்த்தியாக இருந்தன. அவை பின்வருவனவாகும் :—

1. தேன்பலவின் வான்சுனைகள் செம்முகத்த பைங்குரங்கு
தான்கொணர்ந்து மக்கள்கை யிற்கொடுத்து-வான்குணங்கள்
பாராட்டி யூட்டுஞ்சீர் ஈங்கோயே பாங்கமரர்
சீராட்ட நின்றான் சிலம்பு. ௨அ

2. தேன்மருவு பூஞ்சுனைகள் புக்குச் செழுஞ்சந்தின்
கானமர்கற் பேரழகு கண்குளிர - மேனின்(று)
அருவிகள்தாம் வந்திழியும் ஈங்கோயே வானோர்
வெருவுகடல் நஞ்சுண்டான் வெற்பு. ௨௯

3. தோகை மயிலினங்கள் சூழ்ந்து மணிவரைமேல்
ஓகை செறியாயத் தோடாட - நாகம்
இனவளையிற் புக்கொளிக்கும் ஈங்கோயே நம்மேல்
வினைவளையச் செற்றுகந்தான் வெற்பு. ௩0

4. நறவம் நனிமாந்தி நல்லிருட்கண் ஏனம்
இறவி லியங்குவான் பார்த்துக் - குறவர்
இரைத்துவலை தைத்திருக்கும் ஈங்கோயே கங்கை
விரைத்துவலைச் செஞ்சடையான் வெற்பு. ௩௧

5. நாக முழைநுழைந்த நாகம்போய் நல்வனத்தில்
நாகம் விழுங்க நடுக்குற்று - நாகந்தான்
மாக்கையால் மஞ்சுரிஞ்சும் ஈங்கோயே ஓங்கியசெந்
தீக்கையால் ஏந்தி சிலம்பு. ௩௨

6. நாகங் களிறுநுங்க நல்லுழுவை தாமரையின்
ஆகந் தழுவி அசைவெய்த - மேகங்
கருவிடைக்க ணீர்சோரும் ஈங்கோயே ஓங்கு
பொருவிடைக்க னூர்வான் பொருப்பு. ௩௩

7. பணவநிலைப் புற்றின் பழஞ்சோற் றமலை
கணவ னிடக்கிட்ட கட்டி - உணவேண்டி
எண்கங்கை ஏற்றிருக்கும் ஈங்கோயே செஞ்சடைமேல்
வண்கங்கை ஏற்றான் மலை. ௩௪

8. பன்றி பருங்கோட்டாற் பாருழுத பைம்புழுதித்
தென்றி மணிகிடப்பத் தீயென்று - கன்றிக்
கரிவெருவிக் கான்படரும் ஈங்கோயே வானோர்
மருவரியான் மன்னும் மலை. ௩௫

9. பாறைமிசைத் தன்நிழலைக் கண்டு பகடென்று
சீறி மருப்பொசித்த செம்முகமாத் - தேறிக்கொண்
டெல்லே பிடியென்னும் ஈங்கோயே மூவெயிலும்
வில்லே கொடுவெகுண்டான் வெற்பு. ௰௬

10. பிடிபிரிந்த வேழம் பெருந்திசைகான் கோடிப்
படிமுகிலைப் பல்காலும் பார்த்திட் - டிடரா
யிருமருப்பைக் கைகாட்டும் ஈங்கோயே வானோர்
குருவருட்குன் றாய்நின்றான் குன்று. ௰௭

11. பொருத கரியின் முரிமருப்பிற் போந்து
சொரிமுத்தைத் தூநீரென் றெண்ணிக் - கருமந்தி
முக்கிவிக்கி நக்கிருக்கும் ஈங்கோயே மூவெயிலும்
திக்குகக்கச் செற்றான் சிலம்பு. ௰௮

12. மறவெங் களிற்றின் மருப்புகுத்த முத்தம்
குறவர் சிறார்குடங்கைக் கொண்டு - நறவம்
இளவெயில்தீ யட்டென்னும் ஈங்கோயே மூன்று
வளவெயில்தீ யிட்டான் மலை. ௰௯

13. மலைதிரிந்த மாக்குறவன் மான்கொணர நோக்கிச்
சிலைநுதலி சீறிச் சிலைத்துக் - கலைபிரிய
இம்மான் கொணர்தல் இழுக்கென்னும் ஈங்கோயே
மெய்ம்மான் புணர்ந்தகையான் வெற்பு. ௨௦

14. மரையதளும் ஆடு மயிலிறகும் வேய்ந்த
புரையிதணம் பூங்கொடியார் புக்கு - நுரைசிறந்த
இன்நறவுண் டாடி இசைமுரலும் ஈங்கோயே
பொன்நிறவெண் ணீற்றான் பொருப்பு. ௨௧

15. மலையர் கிளிகடிய மற்றப் புறமே
கலைகள் வருவனகள் கண்டு - சிலையை
இருந்தெடுத்துக் கோல்தெரியும் ஈங்கோயே மாதைப்
புரிந்திடத்துக் கொண்டான் பொருப்பு. ௨௨

இனி இந்நூலிலுள்ள வேறு பாடல்களைச் சிறிது பார்க்கலாம். மலைநாட்டு மக்களாகிய குறவர் குறத்தியருடைய வாழ்க்கையும் அங்குள்ள யானை, குரங்கு, பன்றி, நாகம் முதலிய விலங்குகளின் செயல்களும், பலா, வாழை, முதலியவற்றின் கனிகள், தேன் முத்து முதலிய பொருள்கள் ஆகிய இவற்றின் சிறப்பும் அழகாகக் கூறப்பட்டுள்ளன.

யானை பிடிப்பதற்காக வேடர் வழியெங்கும் குழி வெட்டி, மேலே தழைகளைப் போட்டு மூடிவைத்திருக்கிறார்கள். இவற்றில் விழுந்து விடாமல் தப்பிக்கும் பொருட்டு யானைகள் தடியொன்றைத் துதிக்கையாலெடுத்துத் தரை கெட்டியாயிருக்கிறதா என்று ஊன்றிப் பார்த்துக் கொண்டே செல்கின்றனவாம். ஆண் யானைக்குத் தன் பிடியினிடத்திலுள்ள அன்பு பல இடங்களில் பாராட்டப் பட்டிருக்கிறது. ஊடி உறங்கிய பிடிக்கு, யானை நல்ல கதலிக் கனிகளைக் கொண்டுவந்து கொடுக்கிறது. சந்தனத் தழையைச் செந்தேனில் தோய்த்து ஊட்டி, பிடி களித்ததைக் கண்டு தானும் களிக்கிறது. காற்று அசையாமையினாலே உடல் புழுங்கித் துன்புற்ற பிடிக்கு, யானையானது தழைகளைக் கொண்டு வீசுகிறது. இந்தக் காற்றிலே பிடி சுகமாக உலவுகிறது.

குரங்குகள் சிலவற்றின் செயலைப் பார்க்கலாம். ஈன்ற இளங்குழவிக்கு அதன் தாய்க் குரங்கு மலையிலுள்ள தேனைக் கொண்டுவந்து விரலால் தோய்த்து ஊட்டுகிறது. குழவி சிறிது வளர்ந்தபின், முதுமந்தி இளமந்தியை அழைத்துக்கொண்டு தேனிருக்குமிடத்துக்குச் செல்கிறது. நீண்ட கோல்கொண்டு தேனடையைக் குத்துகிறது. இளமந்தி கீழே நின்று வாழை இலையில் அந்தத் தேனைப் பிடித்து உண்டு உவக்கிறது.

புலவர்கள், முல்லையைக் காணும்போது அது சிரிப்பதாகவே கூறுவார்கள். நக்கீரதேவரும் முல்லை சிரிப்பதாகக் கூறி, அதன் சிரிப்புக்கு ஒரு காரணம் கற்பிக்கிறார். மலையிலே பன்றிகள் உழுத இடமெல்லாம் மாணிக்கமும் இரத்தினமும் வேறு பல மணிகளும் குவியல் குவியலாகக் கிடக்கின்றன. சூரிய வெளிச்சத்திலே சிவந்த மாணிக்கங்கள் சுடர்விட்டுப் பிரகாசிக்கின்றன. யானைக் கூட்டங்கள் இந்தப் பிரகாசத்தைக் கண்டு, காட்டுத்தீ என்று அஞ்சி வெருண்டு ஓடுகின்றனவாம். இவற்றைக் கண்டு முல்லை சிரிக்கிறது என்கிறார் நம் ஆசிரியர்.

மேகங்கள் ஈங்கோய் மலையின் உச்சியிலே வந்து தவழ்ந்து செல்கின்றன. இந்த அழகைக் கண்டு அனுபவித்த ஆசிரியர் பல பாடல்களிலே இதைக் கூறியிருக்கிறார். கண்ட கனிகளையெல்லாம் தின்று வந்தது ஒரு மந்தி. தாக

முண்டாய்விட்டது. கருமையான சுனைகளிலுள்ள தண்ணீரை யெல்லாம் அருந்திப் பார்த்தது; தண்ணீர் குளிர்ச்சியாக இல்லையாம் அதற்கு. உடனே என்ன செய்தது? மலையிலேறி உச்சிக்குச் சென்றது. அங்கு ஒரு கொண்டல் தண்ணீரைச் சுமந்து அப்போதுதான் வந்தது. அம் மேகத்தை அப்படியே கீறி வாயில் வைத்து உறிஞ்சித் தன் தாகத்தைத் தீர்த்துக் கொண்டதாம் மந்தி.

" கண்ட கனிநுகர்ந்த மந்தி கருஞ்சுனைநீர்
உண்டு குளிர்ந்திலஎன் றூடிப்போய் - கொண்டல்
இறைக்கீறி வாய்மடுக்கும் ஈங்கோயே நான்கு
மறைக்கீறு கண்டான் மலை "

கம்பரும் இப்படியொரு காட்சியை நமக்குக் காட்டுகிறார். இலங்கையிலிருந்த மகளிர் சிலர் நீராடுவதற்காகக் குளிர்ந்த நீர் வேண்டினர்களாம். எந்த நீரும் அவர்கள் வேண்டிய அளவு குளிர்ச்சியுடையதாயில்லை. அவர்கள் தங்கள் இல்லங்களிலமைந்த உப்பரிகைகளிலே மிக உயர்ந்த மாடத்து ஏறிச் சென்று மேலே சென்ற மேகத்தைப் பொத்து, அதிலிருந்து ஒழுகிய குளிர்ந்த நீரிலே குளித்தார்களாம் :

" உழையுழை பரந்த வான யாற்றுநின் றும்பர் நாட்டுக்
குழைமுகத் தாயர் தந்த புனல்குளிர்ப் பிலவென் றூடி
இழைதொடுத் திலங்கு மாடம் இடைதடு மாற ஏறி
மழைபொதுத் தொழுகு நீரால் மஞ்சன மாடு வாரும் "

என்பது ஊர்தேடு படலத்திலுள்ள ஒரு பாட்டு.

குறத்தியர் கூடித் தினைமா இடிக்கிறார்கள். அவர்களுக்கு உலக்கையாயிருப்பது, களிற்றினுடைய கொம்பு. கல்லுரலிலே இடித்த தினை மாவை, வேட்டைக்குச் சென்று வந்த குறவன் கொண்டுவருகிற செந்தேனோடு கலந்து உண்கிறார்கள்.

" கருங்களிற்றின் வெண்கொம்பாற் கல்லுரல்வாய் நல்லார்
பெருந்தினைவெண் பிண்டி யிடிப்ப - வருங்குறவன்
கைக்கொணருஞ் செந்தேன் கலந்துண்ணும் ஈங்கோயே
மைக்கொணருங் கண்டன் மலை "

என்றார் நக்கீர தேவர். பிற்காலத்திலே இக்கருத்தைத் திரிகூட ராசப்பக் கவிராயர் தமது 'குற்றாலக் குறவஞ்சி'யில்

மிக்க நயமாக எடுத்தமைத்திருக்கிருர். குறத்தியே தன்னுடைய தொழிலேயும் மலே வளத்தையும் கூறுகிருள் :

" மிழங்கு கின்னித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்
கிம்புரியின் கொப்பொடித்து வெம்புதினை யிடிப்போம்."

இனி, சமய சம்பந்தமாக நக்கிரதேவர் இந்தப் பிரபந்தத்திலே என்ன சொல்லுகிருர் என்று பார்ப்போம்.

பிரணவம் என்ற ஒரு அடையாளத்தை நம்மவர்கள் மிக நன்ருக அனுபவித்துப் போற்றியிருக்கிருர்கள். விநாயகரின் வடிவம் அது என்ருர்கள். பிரமன் அதன் பொருளே அறியாமையினல் முருகன் அவனேச் சிறையிலிட்டான் என்பது ஒரு அழகிய கதை. எல்லா உயிர்களிடத்தும் இறைவன் என்றும் நீங்காமல் உறைகிருன் என்ற உண்மையை அடையாளமாகக்காட்டுவது ஓங்காரத்தின் வரிவடிவம். பிரணவத்தின் பொருளே முருகன் சிவபெருமானுக்கு உபதேசித்தான் என வழங்கும் புராணக்கதையும் இந்த அடையாளத்தின் உயர்வை விளக்குவதற்காகவே எழுந்தது. உயிர்களேத் தொழிற்படுத்துபவன் இறைவன். இயக்கம் அல்லது சலனமே தொழிற்படுவதைக் காட்டக்கூடியது. ஒலியெல்லாம் சலனத்தினுலேற்படுவது. எனவே பிரணவத்தின் ஒலி வடிவம், உயிர்களனைத்தையும் இறைவனே தொழிற்படுத்துகிருன் என்பதைக் குறிக்கும் அடையாளம். இந்தப் பிரணவத்தினுடைய வடிவமாயிருக்கும் ஈசனுக்குரிய ஈங்கோய் மலே என்று ஆசிரியர் கூறுகிருர் :

' அடியும் முடியும் அரியும் அயனும்
படியும் விசும்புமபாய்ர் தேறி - நொடியுங்கால்
இன்னதென அறியா ஈங்கோயே ஓங்கார
மன்னதென நின்ருன் மலே."

இவ்வாறு இந்தச் சிறு நூலில் சமய தத்துவங்களே விளக்குவதோடன்றி மலே வளத்தையும் மலேநாட்டு வாழ்க்கையையும் காட்டும் பாடல்கள் பலவற்றை ஆசிரியர் பாடியிருக்கிருர். சைவத்திருமுறை என்ற அளவிலே மட்டுமின்றிச் சிறந்த ஒரு தமிழிலக்கியமாகவும் இப்பிரபந்தம் அமைந்திருக்கிறது.

---

# பல்லவர் காலத்திற் சைவத்தின் நிலை*

(திரு. நல். முருகேச முதலியார், பி. ஏ.)

பேராசிரியர் கே. ஏ. நீலகண்ட சாத்திரியார், 25-6-61 "இந்து" இதழில், 'பல்லவர் காலத்திற் சைவத்தின் நிலை' என்னும் பொருள் பற்றித் தேவாரம் முதலிய அதன் சம கால மூலச் சான்றுகளை ஆராயும் நோக்கத்துடன் ஒரு கட்டுரை எழுதியுள்ளார். அதன்கண் அவர், " சம்பந்தரின் பதிகங்களில் வாழ்த்துக் கூறும் முறையில் அமைந்து, பொதுவாகப் பதினொன்றாவதாக எண்ணப்படுகின்ற இறுதிப் பாடல்கள், பிற்காலத்தில் வேறு எவராலோ இயற்றிச் சேர்க்கப் பட்டனவாக இருத்தல் கூடும் என ஆராய்ச்சித் திறன் மிக்க அறிஞர்கள் ஐயுறுகிறார்கள் " எனக் குறிப்பிடு கின்றார். ஆயினும், 'இன்னோரனைய கருத்துக்களைத் திருத் தமும் பொருத்தமும் உடையவைதாமா? எனச் சோதித்துக் காண வழி எதுவும் இல்லை' என்றும் அவர் இணைத்துரைக் கின்றார்.

சம்பந்தரின் பாடல்களில் பதினொன்றாவதாக வரும் பாடல்கள் எல்லாவற்றையுமா? ஒரு சிலவற்றை மட்டுமா? எவற்றை இடைச் செருகல்கள் என்று அவர் குறிக்கின்றார் என்பது தெளிவாகப் புலப்படவில்லை. பதினொன்றும் பாடல் கள் எல்லாமே இடைச் செருகல்கள் என்பது அவர் கருத் தாயின், அதற்கு ஆதாரம் இல்லை. ஒரு சில மட்டுமே என்றால், அவைகள் எவை எவை எனக் காரணங்களுடன் சுட்டிக்காட்டி யிருத்தல் வேண்டும். அவர் அங்ஙனம் செய் திலர். 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகிய சேக்கிழார், தமது பெரியபுராணத்தில் சம்பந்தரின் பதினொன்றும் பாடலைத் திருக்கடைக் காப்பு என்று, பல பதிகங்களைப் பற்றிப் பாடுங்கால் தெளிவாகக் குறிப்பிட்டுச் சிறப்பித்துப் போற்றியுள்ளார்.

---

*தமிழாக்கம்: ந. ரா. முருகவேள். 23-9-61 'இந்து' இதழில் 'ஆசிரியர்க்குக் கடிதம்' என்னும் பகுதியில் வெளி வந்ததனைத் தழுவியது.

"திருப்பதிகம் நிறைவித்துத் திருக்கடைக்காப் புச்சாத்தி
இருக்குமொழிப் பிள்ளையார் எதிர்தொழுது நின்றருள..."(80)

"காரைகள் கூகை முல்லை எனநிகழ் கலைசேர் வாய்மைச்
சீரியற் பதிகம் பாடித் திருக்கடைக் காப்புத் தன்னில்
நாரியோர் பாகர் வைகும் நனிபள்ளி உள்கு வார்தம்
பேரிடர் கெடுதற்காணை நமதென்னும் பெருமைவைத்தார்"(115)

என்பன போன்று பத்துக்கு மேற்பட்ட பல இடங்களில் 'திருக்கடைக் காப்பு' என்னும் சொற்றொடரைச் சேக்கிழார் தமது பெரியபுராணத்தில் வழங்கியிருத்தல் காணலாம்.

10-ஆம் நூற்றாண்டினராகிய நம்பியாண்டார் நம்பிகள் ஒழுங்கு செய்த தேவாரத் தொகுப்பின் பதிப்பொன்றே, சேக்கிழாருக்குக் கிடைத்திருத்தல் வேண்டும். நம்பியாண்டார் நம்பிகள்,

"பிறவிஎனும் பொல்லாப் பெருங்கடலை நீந்தத்
துறவியெனும் தோற்றோணி கண்டீர்—நிறையுலகில்
பொன்மாலை மார்பன் புனற்காழிச் சம்பந்தன்
தன்மாலை ஞானத் தமிழ்"

எனச் சம்பந்தரின் பாடல்களைப் போற்றித் துதிக்கின்றார். நம்பியாண்டார் நம்பிகள் தொகுத்த தேவாரத் திருமுறைகளிலேயே திருக்கடைக் காப்புப் பாடல்கள் இருந்திருந்தாலன்றிச் சேக்கிழார் அவற்றைக் குறித்துப் பாடியிருத்தல் இயலாது. இடைக்காலத்திலோ தற்காலத்திலோ இருந்த அறிஞர் எவரும், சம்பந்தரின் பதினொன்றாம் பாடல்களை இடைச் செருகல்கள் என்று எங்கும் குறிப்பிட்டிலர்.

1911-ஆம் ஆண்டில் திரு. சுவாமிநாத பண்டிதர் அவர்கள், 15 ஆண்டுகள் அரிதின் முயன்று ஆராய்ந்து வெளியிட்ட அடங்கன் முறையின் சிறந்த பதிப்பில்கூட, "வேள்விப் பாடல்கள்" என வழங்கப்படுவன பற்றிக் குறிப்பிட்டுள்ளாராயினும், சம்பந்தரின் பதிகங்களில் பதினொன்றாம் பாடல்கள் இடைச் செருகலாக இருக்கலாம் என்று, அவர் எங்கும் ஐயுறவாக வேனும் குறிப்பிடக் காண்கிலேம். எனவே, பேராசிரியர் சாத்திரியாரின் கருத்துக்கு ஆதாரமே கிடையாது எனத் துணிந்து சொல்லலாம். மேலும், பதி

னென்றும் பாடலை மட்டும் வேறு யாரோ இயற்றிச் சேர்த்திருந்தால், அத்தகைய இடைச் செருகலுக்கு என்ன நோக்கம்? யாது பயன்? இருந்திருத்தல் கூடும் எனத் தாம் கருதுகின்றார் என்பதையும் அவர் தெரிவிக்கவில்லை. ஒரு பதிகத்தின் இறுதியில் வாழ்த்தியலாகப் பாடல் அமைதற்குப் பழைய காலத்திலும் ஆதரவு இருந்தது. அத்தகைய 'பலஸ்ருதி' இருக்கு வேதத்தின் பல பதிகங்களில் காணப்படுகின்றது.

திரு. டி. ஜி. ஆராவமுதன் என்னும் அறிஞர் ஒருவர், உண்மையிலேயே சம்பந்தரின் பதிகங்களுக்கும் இருக்கு வேதப் பதிகங்களுக்கும் இடையில் ஓர் ஒப்புமை காண்கின்றார். "சம்பந்தர் பல பதிகங்களில் அடியார்களின் சார்பில், அவர்கட்குப் பல ஆன்மீக நலங்களையும் அருளுமாறு, தாம் இறைவனை வேண்டுகின்றார். இங்ஙனம் பதிக ஆசிரியர்கள் தம் பெயரால் பிறருக்கெனச் செய்யும் வேண்டுதல்களை இருக்கு வேதத்திற் காணலாம். நம்மாழ்வாரின் பதிகங்களும் ஸ்ரீ சங்கரரின் பக்தி நூல்களும் கூட, இத்தகைய 'பலஸ்ருதி'களோடு முடிவுறுகின்றன" என்பது அவர் கூற்று. மேலும், பூர்வ பக்கமாகிய அவைதிக மதக் கொள்கைகளை முற்பகுதிப் பாடல்களால் மறுக்கும் சம்பந்தர், இறுதிப் பாடலில் தமது மதத்தின் சிறப்புக்களாகிய சுபக்கத்தினையும் வற்புறுத்தி முடித்தல் இயற்கையும் பொருத்தமுமே யாகும்.

> " பெரும்புங் கவர்புகழ் போதா யனிசுப் பிரமணியன்
> அரும்பும் குருகையிற் கோதில் குலோத்துங்கன் ஆரிடமாய்
> விரும்பும் பொருளைத் தரும்பிர யோக விவேகம்தன்னைக்
> கரும்பும் கனியும் எனப்பாடி னன்தமிழ் கற்பவர்க்கே "

எனவரும் பிரயோக விவேகப் பாடலின்கீழ், "இது தன்னைப் பிறன்போலும் நாந்தி கூறுகின்றது. வட நூலார் தாமே பதிகமும் உரையும் செய்வர். இந்நூலும் வடநூலைத் தற்பவமாகச் செய்தலின், யாமும் பதிகமும் உரையும்செய்து உதாரணமும் காட்டினும்......இனிச் சம்பந்தர் சட்கோபர் முதலாயினோரும் திவாகரம் பதினேண் கீழ்க்கணக்குச் செய்தாரும்

முன்னாகப் பின்னாகப் பதிகம் கூறுவதும் காண்க" எனத் திருக்குருகைச் சுப்பிரமணிய திட்சிதர் அவர்கள் (17-ஆம் நூற்றாண்டு) எழுதியிருத்தலும் ஈண்டு உணரற்பாலது.

மேலும், சம்பந்தர் ஏகபாதம் மாலைமாற்று திருவியமகம் முதலிய கடினமான பதிகங்கள் பலவற்றைப் பாடியுள்ளார். அவைகளிலெல்லாம் இறுதிப் பாடல்களை வேறு பிறர் ஒருவர் பாடிச் சேர்த்திருத்தல் கூடும் என்று எண்ணுதற்கு இடனே இல்லை. யாரோ ஒருவர் இங்ஙனம் எல்லாப் பதிகங்களுக்கும் அவ்வப் பதிகங்களின் சந்தமும் நடையும் செய்யுள் அமைப்புக்களும் பிறவும் சிறிதும் வேறுபடாமல், திருத்தமாக அமையும்படி இயற்றிச் சேர்த்திருத்தல்கூடும் என்பது எளிதில் ஒருபோதும் நிகழக் கூடியதன்று. அஃது இயற்கைக்கு மாறான செய்தியேயாகும். அங்ஙனம் எவரேனும் செய்திருப்பின், அவர் திருநாவுக்கரசர் மாணிக்கவாசகர் முதலினோர் பாடல்களுக்கும்கூட, அங்ஙனம் செய்திருத்தல் வேண்டும்! அவர் அங்ஙனம் செய்யாமைக்குக் காரணம் என்னை? சுந்தரரின் இறுதிப்பாடல்களும் சம்பந்தரின் இறுதிப் பாடல்களைப் போலவே அமைந்துள்ளன. அவற்றைப் பற்றிச் சாத்திரியார் ஒன்றும் குறிப்பிடவில்லை.

சிவப்பிரகாசப் பெருந்திரட்டு (14-ஆம் நூற்றாண்டு) என்னும் பழைய தொகை நூலில், சம்பந்தரின் பாடல்கள் 'திருக்கடைக் காப்பு' என்றே சிறப்பாகப் போற்றி வழங்கப் படுவது கொண்டு, சம்பந்தரின் பதிகங்களில் திருக்கடைக் காப்புப் பாடல்கள் மிகவும் பழமையும் பெருமையும் வாய்ந்தனவாகச் சான்றோரால் நன்கு மதிக்கப் பெற்றமை தெளியலாம். இடைச் செருகல்கள் எனப் பழம்பெருஞ் சான்றோர்கள் கருதியிருப்பாராயின், அங்ஙனம் சிறந்தெடுத்துப் போற்றி வழங்குதற்குக் காரணமே இல்லை.

இனி, அப்பரின் 'இலிங்கபுராணக் குறுந்தொகை' பற்றியும் சாத்திரியார் இவ்வாறே ஐயுறவு கொள்ளுகின்றார். பிரமனும் திருமாலும் தேடிக்காண இயலாதபோது, 'யான் இவ்விலிங்கத்தில் இருக்கின்றேன்' எனச் செஞ்சடைக் கடவுள் தோன்றினர் எனக் கூறும்,

"செங்க ணானும் பிரமனும் தம்முளே
எங்குந் தேடித் திரிந்தவர் காண்கிலார்
இங்குற் றேன்என் றிலிங்கத்தே தோன்றினான்
பொங்கு செஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே"

என்னும் பதினொன்றாம் பாடல் இலிங்கபுராணக் குறுந்தொகையின் இறுதியில் வருகின்றது. "இலிங்கம் என்னும் சொல்லை இழுத்து இணைத்துப் பிணைக்கும் நோக்கத்துடன், இப்பாடல் ஓர் இடைச் செருகலாகப் புகுத்தப்பெற்று இருக்கலாம் எனப் பல வகைகளில் தோன்றுகின்றது. இப்பதிகத்தின் விரிவாகவே இலிங்கபுராணக் கதை ஏற்பட்டிருக்கலாம். அவ்வகை விரிவின் விளைவாகவே இப்பதினொன்றாம் பாடல் அமைந்ததாகலாம்" எனச் சாத்திரியார் கூறுகின்றார். மேம்போக்காகப் பார்ப்பவர்களுக்கும் கூட, இப்பாடலின் இன்றியமையாமை நன்கினிது புலனாகும். இப்பதினொன்றாம் பாடல் இல்லாது போயினால், மேற்பத்துப் பாடல்களிற் குறிப்பிடப்பெற்ற பரம்பொருள் யார் என்பது விளங்க வாய்ப்பு இல்லை. முதன்மையான அதனைத் தெளிவுற விளக்காமற் பத்துப் பாடல்களோடு மட்டும், திருநாவுக்கரசர் அப்பதிகத்தினை முடித்துவிட்டிருப்பார் என்பது பொருத்தமில்லை.

'இலிங்க புராணம்' என்னும் தொடரானது, இலிங்க வழிபாட்டைப் பற்றிக் குறிக்காமல், முதலும் முடிவும் இல்லாத பரம்பொருளின் அடையாளத் திருவுருவத்தின் பழமையைக் குறிக்கின்றதெனலாம். இலிங்கம் என்னும் சொல் அமரகோசத்தின்படி "லக்ஷ்ய திருஷ்ட்ய" என்னும் பொருளையுடையது. ஆணவமலம் உள்ளவரையில் பரம்பொருளைக் காண்பது என்பது இயலாத செயலேயாகும். இலிங்க வழிபாட்டைப் புனிதப்படுத்தித் தெய்வீகமாக்கும் விருப்பத்துடன், வேறு பிறர் எவராலோ இலிங்க புராணக் கதையானது அப்பரின் பதிகத்தில் புகுத்தப்பட்டதன்று. அதனினும் பழமை மிக்க திருமந்திரம் என்னும் நூலின் இரண்டாம் தந்திரத்திலும், இலிங்கபுராணம் என்னும் தலைப்பு அமைந்துள்ளது. அதன்கண் பிரம விஷ்ணுக்கள் மட்டுமேயன்றி, உமையம்மையார் இராவணன் சண்டேசுரர் தேவர்கள் முதலினோர் வழிபட்டுய்ந்த செய்திகளுடன்,

" திரிகின்ற முப்புரஞ் செற்ற பிரானை
அரியன்என் றெண்ணி அயர்வுற வேண்டா
புரிவுடை யாளர்க்குப் பொய்யலன் ஈசன்
பரிவொடு நின்று பரிசறி வானே "

என அன்பு உடையவர்களுக்கே இறைவன் வெளிப்படுவன் என்னும் உண்மையும் வற்புறுத்தப் பட்டுள்ளது. பேராசிரியர் சாத்திரியாரே கூறுவதுபோல, 'இலிங்கபுராணம்' என்னும் இத்தொடரை அப்பர் வேறொரு பதிகத்திலும் குறிப்பிட்டுள்ளார். நம்மாழ்வாரும் கூடத் தம் பதிகம் ஒன்றில்,

" இலிங்கத் திட்ட புராணத் தீரும் சமணரும் சாக்கியரும்
வலிந்து வாது செய்வீர்களும் மற்றுநுந் தெய்வமு மாகிநின்றான்
மலிந்து செந்நெல் கவரிவீசும் திருக்குருகூர் அதனுள் [மினே.
பொலிந்து நின்ற பிரான்கண்டீர் ஒன்றும் பொய்யில்லை போற்று

என இத்தொடரைக் குறிப்பிட்டுள்ளார். இலிங்க வழிபாட்டினை இலிங்க புராணந்தான் குறிப்பிடுவதாக எவரேனும் கருதினால், அஃது ஒன்று மட்டுமேயன்றிச் சைவம் பிரமாண்டம் காந்தம் (காசிகாண்டம்) முதலிய புராணங்களும்கூட அதனைக் கூறுகின்றன என நாம் சுட்டிக்காட்டலாம். பிறபிற நூல்கள் இலிங்கத்தினைச் 'சிசின தெய்வம்' எனச் சுட்டும் முறையிற் பல இழிந்த கதைகளைக் கூறுகின்றனவாயினும், தமிழ் நூல்களில் அத்தகைய குறிப்புக்கள் ஒன்றும் யாண்டும் இல்லாமை அறிந்து மகிழற்பாலது.

" காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய்
நீணாகம் அணிந்தார்க்கு நிகழ்குறியாம் சிவலிங்கம்"

எனச் சிவலிங்க தத்துவத்தினைச் சேக்கிழார் அழகுற விளக்கியருள்கின்றார்! புனிதம் மிக்க இச் சிவலிங்கத்தினைப் பிறவாறு கருதி இகழுபவர்களைக் குறித்தே,

" சத்தியும் சிவமும் ஆய தன்மையிவ் வுலகம் எல்லாம்,
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உயர்குண குணியு மாக
வைத்தனன்; அவனால் வந்த ஆக்கமிவ் வாழ்க்கை யெல்லாம்.
இத்தையும் அறியார். பீட லிங்கத்தின் இயல்பும் ஓரார் !"

எனச் சிவஞான சித்தியாரில் ஆசிரியர் அருள்நந்தி சிவம் அருளிச் செய்தார். எனவே, இலிங்கபுராணக் குறுந்தொகை

யின் இறுதிப்பாடல் இடைச்சேருகல் அன்று என்பதும், சிவலிங்கத்தினைச் 'சிசினம்' எனப் பிறர் சிலர் இகழும் முறையிற் கூறிவந்த புல்லிய கதைகளை மறுத்துரைத்து, அதன் அருமை பெருமைகளை விளக்கும் திருக்குறிப்புடன் அப்பர் பெருமான்தான் அதனை அருளிச்செய்தனர் என்பதும், சான்றோர்களின் கருத்துக்களாதல் பெறப்படும்.

பேராசிரியர் சாத்திரியார் மகேந்திரவர்மன் இயற்றிய "மத்தவிலாசப் பிரகசனம்" என்னும் நூலை ஒரு சிறந்த இலக்கியச் சான்றாகப் போற்றுகின்றார். ஆனால் "அது சமய சமுதாய வாழ்க்கைகளை ஒரு சிறிது வெளிப்படுத்துகின்றதாயினும், அதனை ஓரளவு விழிப்புடன்தான் ஆராய்ந்து விளக்கத் தலைப்படுதல் வேண்டும்" எனக் கூறுகின்றார். அந்நகைச்சுவை நாடக நூலில்வரும் சைவ பாசுபதர் சைவ காபாலிகர்களைப்பற்றி அவர் குறிப்பிடுகின்றார். காபாலிக பாசுபத மதக் கொள்கைகள் அக்காலத்தில் தமிழ் நாட்டிற் பரவியிருக்கவில்லை. எச். எச். வில்சன் என்பவர் எழுதிய "இந்துக்களின் சமயப் பிரிவுகள்" என்னும் நூலின் 10-ஆம் பக்கத்தையும், சர். சார்லஸ் எலியட் என்பவர் இயற்றிய "இந்து மதமும் புத்த மதமும்" என்னும் நூலின் இரண்டாம் பகுதியில் உள்ள 17, 18-ஆம் அத்தியாயங்களையும், இதுபற்றி யறிய விரும்பும் வாசகர்கள் படித்துணரலாம்.

" அருமணித் தடம்பூண்முலை அரம்பைய ரோடருளிப் பாடியர்
உரிமையிற் றொழுவார் உருத்திர பல்கணத்தார்
விரிசடை விரதிகள் அந்தணர் சைவர் பாசுபதர் காபாலிகள்
தெருவினிற் பொலியும் திருவாரூர் அம்மானே "

எனவரும் பாடலில், பாசுபதர் காபாலிகர்கள் சுட்டப்பெறுகின்றனராயினும், அவர்கள் அருவருத்து அஞ்சத்தக்க கொடிய இயல்புகளை யுடையவர்களாகக் காணப்படவில்லை. எனினும், பாசுபத காபாலிக மதங்கள் சைவத்திற்குப் புறம்பானவையே. பிற்காலத்துச் சைவ நூலாசிரியர்களாலும் கூட, அவைகள் அங்ஙனமே பாகுபடுத்தப் பட்டுள்ளன.

---

# சைவசித்தாந்தமும் மேல்நாட்டவரும்

பல சமயங்களை ஒத்திட்டுப் படிக்கும் முறை மேல் நாட்டில் இந்த நூற்றாண்டில் தான் பெரும்பாலும் கையாளப் பட்டு வருகிறது. எனினும் அச்சமயங்களால் வரும் மெய் யுணர்வின் பேற்றை ஒத்திட்டுப் பார்த்த ஆசிரியர்கள் வெகு சிலரே. பல சமயங்களைச் சார்ந்த அனுபூதிமான்களின் உணர்வுகளை வடுருவி பார்த்தால் அடிப்படையான ஒற்று மையைக் காணக்கூடு மென்றும், அதினின்றும் மெய் யுணர்வின் முறைமையை ஒருவாறு அறிவியலில் வகுத்துக் கூற முடியுமென்றும் முதன் முதலாகச் சொன்னவர் பேரா சிரியர் யோவாகிம் வாக் (Joachim Wack) என்பவர் எனலாம். இவர் ஒரு ஜப்பானியர். 1898-ஆம் ஆண்டு பிறந்தவர். இரண்டாவது உலகப் போரில் தாய் நாட்டை விட்டகன்று அமெரிக்கா போந்து சிக்காகோ பல்கலைக் கழகத்தில் தத்துவத் துறையில் பல்சமயப் பயிற்சிப் பேரா சிரியாக விளங்கியவர். அதற்குமுன் ஐரோப்பியாவிலேயே இந்திய தத்துவங்கள் போதனையில் தலைசிறந்த லைப்சிக்கிலும் சிறிது காலம் ஆசிரியாக இருந்தார். 1952-ஆம் ஆண்டில் நம் நாட்டிற்குப்போந்து பல சொற்பொழிவுகள் (Barrows Lectures) இயற்றினார்கள். அவர் 1955-ல் காலமானார். அவர் கடைசியாக எழுதிய நூல் The "Comparative Story of Religion." (Columbia University Press, NewYork, 1958.) இப்போது வெளிவந்துளது. இது வில்லியம் ஜேம்ஸ் முதலியவர்கள் எழுதியுள்ள நூல் களைவிட சில முறைகளில் சிறப்புடையதாகக் காணப்படு கிறது. ஏனெனில், இவர் வேதாந்தம் பயின்ற டாக்டர் டாசன் முதலியவர்களிடம் மட்டும் தொடர்பு கொண்டவர் அல்ல. தமிழ் தத்துவம் அறிந்த டாக்டர் ஃபிரடரிக் ஹைலர் முதலானவர்களோடு இணக்கம் பெற்றவர். மேலும் தம் ஊராகிய டாக்டர் ஷோமீரஸ் சைவ சித்தாந்தத்தைப் பற்றி எழுதிய பெரியதொரு நூலையும் (Der Saiva Siddhanta

Eine Mystik Indians, 1912) நன்கு படித்தவர் எனக் காணப்படுகிறது.

டாக்டர் வாக்கின் முக்கிய கூற்றுத் தத்துவ சிந்தனைகள் சமய அச்சுக் கட்டிலிருந்து விடுதலை யடைந்தால் அவைகளுக் குள் பரஸ்பர ஒற்றுமையைக்(Geminschaft ie., Mutual Participation) காணலாம். அதிலிருந்து பல்வேறு சமயங் களால் பெறப்படும் பெற்றியின் முறைமையை (Religions-chaft ie., Science of Religion) ஒருவாறு வழிவகுத்துக் காணலாம் என்பது. அறிதற்கரிய பரம் பொருள் ஒரு குணத்தது ஆகாது. எனவே அவரவர்கள் பல்வேறு சாதனைகளைப் பெறுவது இயல்பே. பல்வேறு சமயங்களும் பல்வேறு அனுபூதிமான்களும் உள்ளது ஆதலால் இயல்பே. ஆனால் அவர்களெல்லாம் மெய்யுணர்வு என்ற அடிப்படை யிலே ஒரே இனத்தவர். அவர்கள் யாவர்க்கும் பொது ('Universal Options') என்பது இவர் முடிபு. இது சைவ சித்தாந்தத்தின் சீரிய கொள்கைக்கு இணக்க முடைய தாக இருக்கிறது. மேல்நாட்டவர்கள் சைவ சித்தாந்தத்தை உணர்ந்தால் தங்கள் சீரிய கருத்துகளெல்லாம் முன்பே சைவ சித்தாந்தத்தில் இடம் பெற்றுள்ளதை உணர்வார்கள். டாக்டர் வாக் நூலுக்கு முன்னுரை எழுதியுள்ள டாக்டர் யோசப் கிடகாவா என்பவர் பேராசிரியர் வாக் இந்திய தத்துவ நிபுணர்களிடம் ஒரு குறை கண்டதாகக் கூறி யுள்ளார். அது என்னவெனின் அவர்கள் இந்து மதத்தின் பல்வேறு சாயல்களை 'வேதாந்தம்' ஒன்றைக் கொண்டே பேசுகிறார்கள், அதற்கு முன்னும் பின்னும் நிலவிய வளர்ச்சி களில் கண்ணோட்டம் செலுத்துவதில்லை, அதன் விளைவாக இந்து சமயத்தின் ஆழ்ந்தகன்ற விரிவைக் குறுக்கி விடுகிறார் கள் என்பது. வேதாந்தத்தின் உச்சியில் பழுத்த சைவ சித்தாந்தத்தைச் சிறிதேனும் உணர்ந்தவர்கள் இந்த அற்புதக் கருத்தைக் கொள்வது வியப்பில்லை.

பேராசிரியர் வாக் சைவ சித்தாந்தத்தைப்பற்றித் தம் நூலில் சுமார் ஐந்தாறு இடங்களில் குறிப்பிட்டு எழுதியுள் ளார். இது போற்றத் தக்கதே. ஏனெனில் மேல் நாட்டு

ஆசிரியர்கள் சைவ சித்தாந்தத்தைப்பற்றி அதிகமாக உணர்ந்தவர்களில்லே. சைவ சித்தாந்தத்தைப்பற்றி அதிகமாக உணர்ந்த டாக்டர் கிரால், டாக்டர் ஷோமீரஸ் முதலானவர்கட்குப்பின் ஜர்மெனியில்கூட சைவ சித்தாந்தத்தில் ஈடுபாடுடையவர் மிகச் சிலரே. டாக்டர் வாக் சைவ சித்தாந்தத்தைப்பற்றிக் கூறியுள்ள கருத்துக்களே ஈண்டு சுருக்கமாக எழுதியுள்ளோம்.

பக்கம் 35. சமயத்திலும் பக்தியிலும் இந்து சமயத்தைச் சார்ந்த ரிஷிகளுக்கும் பக்தர்களுக்கும் எவர் நிகராவர்?......சைவத்தின் கவிகளிடையே இதைக் காண்கிறேம். உதாரணமாக தேவாரம் பாடியவர்களும், முக்கியமாக ஸ்ரீ மாணிக்கவாசகரும் இதற்கு உதாரணமாவார்கள்.

பக்கம் 83. இந்த சமயம் இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள பிரிவை 'சக்தி' என்ற தத்துவத்தைக்கொண்டு பாலமிடுகிறது. முக்கியமாக, சைவத்திலும் சாக்தேயத்திலும் கடவுளுக்கும் சகத்துக்கும் காட்டப்பட்டுள்ள சம்பந்தம் முக்கியமானது. இதில் தனிப்பட்ட சிறப்பு தமிழ்ச் சமயிகள் கடவுளின் சக்தியையும் அவன் அருளேயும் ஒன்ருகக் கொள்வதாகும். இவர்கள் இறைவனது அருட்சக்தியை அவனது பல கிருத்தியங்களில் ஒன்று எனக் கருதுகிருர்கள்.

பக்கம் 91. இந்துமத உட்பிரிவுகளில் பல வேறுபாடுகள் இருந்தாலும், மனிதனைப்பற்றிய கொள்கை கிரேக்க, கிறிஸ்துவ கொள்கைகளிலிருந்து வேறுபாடுடையது...... ஸ்ரீ சங்கரர் உபாதிகளே உயிர் வேருெம் தோற்றத்தை உண்டு பண்ணுகிறது. இதற்கு 'அவித்தை'க் காரணமென்பர். இராமானுஜர் கடவுள், உயிர், சடப்பொருள் என்ற மூன்றைக் கற்பிக்கிருர், ஆனல் பின்னிரண்டு சத்தாகிய முதல்வனின் சார்புடையது, அவைகள் கடவுளின் பிராகாரங்களே, கடவுள் அந்தரான்மாவாக அவைகளே இயக்குவிக்கிருன், அதுபோல் ஆன்மாவும் உடலுக்கு இயமானன் என்பர். சைவ சமயமோ பதி பசு பாசம் என்ற மூன்றின் சம்பந்தங்களேத் தெரிவிக்கிறது.

*Supplement to "Siddhantham"-October, 1961*

# வள்ளல் ஞானசாரம்*

### கணபதி

ஒருமைவெண் கோட்டுக் கன்றை யோரிரு கன்னக் குன்றைச்
சொரியுமும் மதத்து நால்வாய் ஐங்கரத் தும்பி தன்னை
அருவிகண் ணுறை மேழை யன்பருக் கன்றி யெட்டாத்
திருவடி நலஞ்சே ரின்பத் தெய்துவான் சிந்தை செய்வாம்.

### நடராசப் பெருமான்

அஞ்செழுத் துண்மை யான அம்பலந் தன்னின் மூலத்
துஞ்சிருள் கிழிய நின்று தோந்தோமென் றம்மை காணக்
குஞ்சித நடனஞ் செய்யும் குருமலர்ப் பதமுட் கொண்டு
வஞ்சக மலங்கள் நீங்க வழுத்திமுன் வணங்க லுற்றும். 2

### சிவகாம சுந்தரியம்மை

ஆடகப் பொதுவி னின்றே யரும்பொருள் நடிக்கு மின்ப
நாடகச் சான்ற தாய ஞானநா யகிதன் செம்பொற்
சூடகக் கரமும் அன்புந் தொலைவிலா நகையுஞ் செய்ய
பாடகப் பதமும் போற்றிப் பவத்துய ரகற்ற லுற்றும். 3

### நால்வர்

அந்தமில் சிவனைக் காட்டி யமுமிறை சரணம் போற்றி
வெந்தநீற் றறையை வென்ற வித்தகன் பதங்கள் போற்றி
யெந்தையை யிருகாற் றூது போக்கின னிருதாள் போற்றி
யுந்திடும் விழிநீர் வாத வூரனற் பாதம் போற்றி. 4

### திருத்தொண்டர்கள்

சீருள் பெருகு முண்மைத் திருத்தொண்டத் தொகையி னுள்ளோர்
ஆருட் பாதம் போற்றி யவர்திருத்தொண்டு தன்னைப்
பேரரு ளதனைற் றந்தோன் பிணைமலர்ப் பாதம் போற்றி
சோர்வறச் சிவன்பா லன்பாந் தொண்டர்தம் பதங்கள்போற்றி.

---

* தஞ்சைச் சரபோஜி அரசர் சரஸ்வதி மகால் நூல் நிலயச் சுவடியின் படி எழுதப்பட்டது.—தீ. கி. நா.

### நூற்பெயர்

மிக்கவே தாந்த சைவ மெய்ப்பொருட் பயனுய் மூவர்
தொக்கசெந் தமிழ்ச்சேர் வாய்மைச் சுருக்கமாய் வாதவூரர்
உக்குரின் றேது முண்மைக் குரியதா லிந்த நூற்குத்
தக்கபே ருரைக்கில் ஞான சாரமாம் பேர தாமே. 6

### அவையடக்கம்

தம்பர மற்று சிற்போர் தம்மிழப் பதனில் வாய்க்குஞ்
செம்பொரு ளதனை நூலாற் செய்யநான் துணிந்த செய்தி
யும்பரின் மீதே சுட்டி யுணர்வறு குதலைச் சொல்லால்
அம்புலி வேண்டி நின்றே யழுமழத் தன்மை போலும். 7

பொய்வகைச் சாரு வாகன் புகழ்ச்சிவாத் துவிதி யீருய்
உய்பொரு ளிதுவென் றெண்ணி யின்றள வுணர வொண்ணு
மெய்தரு பொருளா யின்ப வீட்டில்வே தாந்த மாகும்
சைவவத் துவிதந் தன்னைத் தமிழினூற் சாற்ற லுற்றும். 8

பரசிவன் பரையாற் பாய குடிலையில் நாதந் தோன்றி
விரவிய நாதந் தன்னில் விந்துவாய் விந்து தன்னில்
மருவுசா தாக்கிய மாகி மன்னுசா தாக்கி யத்தின்
உரவிடும் மகேச மாய்ப்பின் னுருத்திர மதனி லுண்டாம்.9

சொன்னமுன் விந்து தன்னிற் சூக்குமா திகளோர் நான்கும்
வன்னமோ ரைம்பத் தொன்று மந்திர மேழு கோடி
யுன்னிடு நூல்க டானும் உற்பவித் தசுத்த மாயை
தன்னிலே யனந்தர் தம்பாற் றுடிகலை நியதி சாதம். 10

சாதமாங் கலையில் வித்தை வித்தையி லராகஞ் சாரும்
ஓதிய கலையி லந்த வுருத்திர ருளி னலே
தீதிலா மூலமான பகுதிமுக் குணஞ்செ னித்தங்(கு)
ஆதியவ் வியத்தந் தன்னிற் சித்தநற் புத்தி யாமே. 11

எய்திய புத்தி யின்க ளுங்கார மாங்கா ரந்தான்
தைசத மென்றுஞ் சாற்றும் வைகரி யென்றும் பின்னர்ப்
பெய்தபூ தாதி யென்றும் பேசுமாங் கார மூன்றிற்
றைசதந் தருமுன் சாத்து விதமனஞ் சோத்தி ராதி. 12

கூறும்வை கரியாங் காரத் திராசத குணத்தைக் கொள்ளும்
மாறில்வாக் காதி யைந்தும் வந்தபூ தாதி தன்னில்
ஈறில்தா மதகு ணத்தை யெய்துசத் தாதி தோன்றித்
தேறுசத் தாதி யைந்திற் செனித்தவை யினிச்சொல் கின்றாம்.

மருவிய சத்தந் தன்னில் வானமுன் வந்து வாயுப்
பரிசமீ தினிலுண் டாகிப் பாவக முருவத் தாகி
யிரதமீ தினிலப் புண்டாய் இருநிலங் கெந்தத் தாகி
விரவிய தோற்றம் போல வொடுக்கமும் விளம்ப லுற்றாம்.

மண்மணத் தொடுங்கு மப்பு விரதத்தி லொடுங்குந் தேயு
வெண்ணுரு வத்தி லேயும் வாயுவும் பரிசத் தெய்தும்
விண்ணொலி யதனின் மேவும் மேவுசத் தாதி யைந்தும்
நண்ணுபூ தாதி யான வாங்காரந் தன்னில் நண்ணும். 15

உற்றரா சதகு ணத்தை யுடையவாக் காதி யைந்தும்
மற்றவை கரியாங் காரந் தன்னிலே மன்னும் முன்னர்ச்
சொற்றசோத் திராதி யஞ்சாத் துவிதநற் குணத்தை முற்றப்
பற்றுதா மதமு முற்றை சதத்தினிற் பதியு மன்றே. 16

மன்னுமாங் கார மூன்றின் வகுப்பேவர் தொன்றாய்ப் புத்தி
தன்னிலே யொடுங்கு மந்தப் புத்திசித் தத்திற் சாரும்
உன்னுமச் சித்த மவ்வி யத்தத்தி லொடுங்கும் பின்னும்
பன்னும்அவ் வியத்த மான பகுதிபின் றொகுதி சொல்வாம்.17

பஞ்சவிஞ் சதிக ளாயவ் வியத்தமாம் பகுதி தானும்
விஞ்சிய ராகந் தானும் வித்தையு மாக மூன்றும்
எஞ்சிடு கலையி லெய்தும் இக்கலை நியதி காலந்
துஞ்சிடு மாயை தன்னிற் சுத்தத்தி லொடுக்கஞ் சொல்வாம்.

பொருவரு நூல்கள் போற்றும் மனுவெழு கோடி மிக்க
வருணமோ ரைம்பத் தொன்றும் நால்வகை வாக்கும் முன்னர்ப்
பருணமித் தெழுந்த விந்துத் தன்னிலே பதியும் வித்தை
தருமகே சத்தி லெய்தும் மகேசமும் சதாசி வத்தாம். 19

ஆதியாஞ் சதாசி வந்தான் விந்துவி லடங்கும் விந்து
நாதமீ தொடுங்கு நாதங் குடிலைதா னென்று நல்லோர்
ஓதுமா மாயை தன்பா லொடுங்குமிவ் விரண்டு மீசன்
தீதறு கிரியா சக்தி தன்னிலே சேரு மன்றே. 20

செப்பிய கிரிகை யிச்சை ஞானமெய்ப் பரையிற் சேரும்
அப்பரை பரத்தோ டுங்கும் ஆக்கமு மழிவு மில்லை
யிப்படி யொடுக்கந் தோற்ற மிருந்தவா கண்டா யாகிற்
றப்பிலா விச்சா ஞானக் கிரியையின் றன்மை கேளாய். 21

சாற்றிய பரசி வன்றன் பராசத்தி தன்னின் முன்னே
தோற்றிய விச்சா ஞானத் தொழிலொரு மூன்று மான்மா
மாற்றரு மிச்சா ஞானக் கிரியை யெழுப்பும் மன்னித்
தேற்றமி லிச்சா ஞானச் செய்தியுன் செய்தி யாமே. 22

சொல்லிய விச்சா ஞானக் கிரிகையுன் சொரூப மாக்கி
எல்லையில் போக மாய விந்திய விடையத் தீசன்
புல்லிய கறங்கு கொள்ளி வட்டமே போல்ந டிப்பித்
தொல்லையி லுனையு ணர்த்து முறையை யுரைக்க லுற்றும். 23

வானகம் வயுத் தீநீர் மண்ணெனும் பூத மைந்தின்
மேனிகழ் செவிதோல் கண்ணு நாசியின் விடய மாகத்
தானுறு கின்ற சத்தப் பரிசரு பரத கெந்தம்
ஊனமில் வாக்குப் பாத பாணிபா யுருவு பத்தம். 24

மேல்சொலல் கெமன தான விசர்க்க மானந்த மான
சாலும்வாக் காதி தன்னைச் சாரும்ஐ விடயம் பின்னர்
ஏலுமா னதமே புத்தி யென்னுமாங் காரஞ் சித்தம்
நாலுமற் றிவைகள் போக்ய காண்டமாய் நண்ணு மன்றே.

அனைத்தினும் பற்றி சிற்றல் நிச்சய மெழுப்ப லையந்
தனைச்செயு மருதி நாலுஞ் சார்புல னைந்தும் பூத
மெனச்சொல்வ தைஞ்சு ஞானேந் திரியமைஞ் சஞ்ச தென்பர்
வினைத்தவாக் காதி யாக விளம்பிரு பத்து நாலும். 26

இங்கிதற் கான்ம தத்துவ மென்றும்பே ரிதற்கு மேலாம்
தங்கிய கால மோடு நியதிசார் அவித்தை பின்னர்ப்
பொங்கிய கலை ராகம் புருடனோ டுற்ற மாயை
யங்கவை யேழும் போக காண்டமென் றறைவ ரன்றே 27

காலமு மூன்றும் மூன்றுங் கழிதரு காலம் பின்னர்
ஏலவே நிகழுங் காலம் எதிர்வரு கால மென்பர்
சாலுநற் பலன்க ளெல்லை சார்தொறும் புதுமை மூன்றிற்
சிலநிச் சயமே பண்ணும் நியதியின் செய்தி தானே. 28

ஆணவஞ் சிறிதே நீக்கி யருங்கலை கிரிகை யாக்கும்
பேணிய வித்தை ஞானம் பெருக்கிடு மராக மிச்சை
நீணுதல் பண்ணும் பஞ்ச விடயமா நிலைமை தோறும்
காணுதல் முந்தி நிற்றல் கருதிடிற் புருட னாமே. 29

மாயைதான் விடயந் தன்னில் அறிவினை மயக்கி நிற்கும்
மேயவிவ் வசுத்தா சுத்த வித்தியா தத்து வத்தோடு
ஆயதத் துவமுப் பத்தொன் றதற்குமே லவத்தை யீசன்
தூயசா தாக்கியம் விந்து நாதநற் சுத்த மைந்தே. 30

ஞானநற் கிரிகை தன்னை வகுத்ததில் ஞான மேறில்
ஊனமில் வித்தை யாகும் ஒன்றிய ஞான மன்றி
மேனிகழ் கிரிகை யேறின் மகேசமாம் விளம்பி ரண்டும்
தானவை யொத்தல் சாதாக் கியமெனச் சாற்றும் நூலே.

மெய்யருண் முகிழ்ப்பு விந்து மேவிடுஞ் செலவு நாதம்
ஐவகை யாகு மிக்கோர் அறிசிவ தத்து வங்கள்
மெய்வகை யிவைக ளைந்தும் பிரேரகாண் டமதா மாக
உய்வகை முப்பத் தாறிங் கென்பர்நூ லுணர்ந்து ளோரே.

ஓதிடு முப்பத் தாறில் ஓரைஞ்சு செலுத்த மற்றேழ்
போதநற் கிரிகை யிச்சை புணர்த்திடப் போதன் றன்பால்
மோதிரு பத்து நாலு முதலற வடிவ மாக்கல்
தீதற வுணர்த்துந் தன்மை யவத்தைகள் செப்பக் கேணீ. 33

கீழிடு மவத்தை யென்றுங் கிளர்நடு வவத்தை யென்றும்
வாழுமே லவத்தை யென்று மாமறை புகழு மிங்குக்
கேள்விசே ரிவற்றிற் கீழா மவத்தையைக் கிளக்கில் மிக்கோர்
தாழ்வில்சாக் கிராதி யைந்தாய்ச் சாற்றுவ ரருளினாலே. 34

சாக்கிர சுவனத் தோடு தங்கிலை சுழுத்திப் பின்னர்
போக்கிய துரியமோகம் பொருந்திடு மதீதமென்று
நோக்குவ ரவத்தை யைஞ்சாம் இங்கிவை நவிலுங்காலை
நீக்கமில் அருளி னின்று கேட்டியே நிகழ்த்த லாமே. 35

முன்னுரை செய்த முப்பத் தாறினில் மொழிந்த பூதத்
தன்னிலை யைஞ்சோ டாறு கலாதிக ளைஞ்ச தாக
உன்னிய சுத்த மோவ வுற்றிடும் வாயுப் பத்து
மன்னிய வசன மாகி வந்தவை யைந்துங் கூடும். 36

இவ்வகை சோட சங்கள் எகிடப் பதினைஞ் சாகும்
மெய்வகைக் கருவி வந்த மேவலான் முப்பத் தைஞ்சாம்
அவ்வகை யோடு நெற்றி யதன்மருங் கணைந்து நிற்றல்
செய்வதே சாக்கி ரத்தின் செய்தியென் றுரைப்பர் தேர்ந்தோர்.

சொற்றரு முப்பத் தைஞ்சோ டாணவந் துவன்றி மூட
நிற்றல்சாக் கிரம தாகும் நீடுசோத் திராதி பின்னர்
உற்றவாக் காதி பத்தும் ஒண்ணுத விற்கக் கண்டப்
பற்றினி லிருபத் தைந்தும் படர்வன சுவன மாகும். 38

கண்டமா திருபத் தைஞ்சிற் கருவிகண் மூன்று நீங்க
முண்டக விதையஞ் சேர்தல் சுழுனையாம் மொழிந்த மூன்றில்
எண்டரு மிரண்டா நாபி யெய்திடல் துரிய மூலக்
குண்டலி யதனி லொன்றாய்க் கூறிடும் மறைக டானே. 39

ஆகக்கீ ழவத்தை மீது சாக்கிரத் தவத்தை யைஞ்சா
யோகத்தை யுரைக்குங் காலை யதீதமே முதலாய்க் கொண்டு
தேகத்தின் நுதற்க ணைந்தின் செய்திக டோறுங் கண்டாற்
போகத்தி னிடைய வத்தை போயருட் போத னைய்நீ. 40

நாட்டுமே லவத்தை கூறின் நடுவகீ ழவத்தை நாடக்
காட்டிய சுத்த மாயைக் கண்ணினி லைந்து நான்கு
கூட்டுமூன் றிரண்டோன் றாகக் கூறுமஞ் சவத்தை தன்னை
வீட்டுமே லவத்தை யென்று வேதநூல் விளம்பு மன்றே. 41

இங்கிவை பதினைஞ் சாகும் இதற்குமே லுணர்த்துந் தன்மைப்
பங்கினை யுரைக்கி லோரோர் விடயமாம் பகுதி தோறும்
எங்குமாஞ் சுத்த மைந்து மனுதியுங் கலாதி யேழுந்
தங்குமைம் பொறியைம் பூதம் தன்னிலொன் றென்று சாரும்.

ஈங்கிவை பதினெட் டோடு மெண்ணுமைங் கலையி னின்ற
பாங்குரைக் கருமந் தன்னை யைம்பொறிப் பகுதியா லுற்று
ஓங்கிய நிவர்த்தி யாதி யுற்றிடும் போதந் தன்னை
ஆங்கதி னின்று நின்றே யருந்துவ தணர்த்துந் தன்மை. 43

ஓதிய வுணர்த்துந் தன்மை யவத்தைக ளேதற்கென் றன்னிற்
போதமில் மாயைச் செய்தி புகன்றவா ணவத்தின் செய்தி
யேதுகா ரணமா மென்னில் இவ்வயி னுபகா ரந்தான்
நீதரு கன்மத் தாலே செறிந்தமை யறிந்து கொள்நீ. 44

கேதமி லுணர்த்துந் தன்மை தனக்குமேற் கேவ லத்தை
யோதிடி னுன்ற னுண்மை யொன்றுமற் றிரண்டு மற்றும்
பேதமில் வடிவுமற்றுப் பிறங்கிய கருவி யற்றுத்
தீதுறு மிருட்கண் மானச் சித்துடன் அசித்து மற்று. 45

துன்பமோ டின்ப மற்றுத் தொல்லிருட் கிடையு மற்று
முன்பொடு பின்பு மற்று முழுதுமா ணவமே யாகி
யன்புசெய் கலாதி யற்றங் கறிகுறி யற்றுச் சற்றுந்
தன்குண மற்று நிற்றல் கேவலத் தன்மை தானே. 46

கீட்சொன்ன வுபாதி யெல்லாங் கிளைத்துட னுருவாய் மாய
வாட்கையே சகல மென்று மறைகள்நின் றறையுஞ் சுத்தப்
பாக்கியந் தன்னை யுன்னிற் பகர்ந்திடு மிரண்டுந் தாக்க
நீக்கமில் பொதுஞா னத்தின் நின்றிடா நிலைமை யாமே. 47

தாவில்சிற் குணனுய்த் தன்னைக் காண்டல்சாக் கிரம தாகும்
மேவுதற் பரையைக் காண்டல் மிக்கசொற் பனம தாகும்
ஆவிபோய்ப் பரையே யாதல் சுழுத்தியா னந்த மாதல்
ஓவருந் துரிய மின்ப வுறுதிதா னதீத மாமே. 48

இத்தகு நிமல சாக்கி ராதியி னியல்பைக் கூறில்
அத்தகு மருளி னாலே யைவகை மலத்தைச் சொல்லிற்
சித்தெலா மசித்தாய் நீடச் சிவவிழுப் பறிவாய் வாழும்
மித்தையா ணவமா மென்று ஞானநூல் விதிக்குமன்றே. 49

தன்னிழுப் பதுவு முண்மைத் தனிமுத லிழுப்புங் காட்டா
அந்நிலை திரோத மாகுந் தநுகா ணாதி யாகி
மன்னுயி ரதற்கு மாயை மயக்கமே போத மாகும்
இன்னிய தன்மா தன்ம இதாகிதங் கரும மாமே. 50

ஏகமா மலர்க்கும் மற்றை யிருமலப் பகுதி யோர்க்குந்
தேகமா திகணான் காகிச் சரிகைநற் கிரிகை சேர்ந்த
யோகமா நிலையி னின்றோர்க் குற்றநற் பதங்க ளாகி
ஆகமார் சகலர்க் கான வதோமாயை யனைத்தும் நீங்கி. 51

மன்னுகா ரணர்க்கு மெய்யாய் நிற்குமா மாயை யென்று
பன்னுமா மறைகள் பஞ்ச மலநிலைப் பகுதி தன்னைச்
சொன்னவிம் மலங்கள் ஞானச் சொரூபமே யானு லன்றி
உன்னறி வதனல் நீங்கற் கரிதென வுணர்ந்து கொள்ளே. 52

இவ்வகை மலத்தை நீக்கி யிறைவனே துக்கி யாகி
யவ்வகை யுயிர்க்கு மூல வறிவதாய் நின்று வந்த
மெய்வகைத் தன்மை நிற்க மேனிதான் உடையார் போலக்
கைவரக் கிடைத்திட் டுனக் கட்புல னுவ னன்றே. 53

இருவினை யொப்பிற் சத்தி நிபார்தக்கண் ணீசன் ஞானக்
குருவுரு வாகி வந்து கூறருங் கருணை கூர்ந்து
அருள்விழிச் சாம்ப வத்தால் அறிவினுக் காதி யான
திரியல மொழிக்கு ஞான தீக்கைமேற் செப்ப லுற்றும். 54

தீர்த்தபக் குவத்தி அற்ற சேடனை யிருத்தி ஞான
வேந்தருள் புரிவா னுன்னில் வேறற நின்றே யுன்னை
யார்த்தவிவ் வுடற்க ணிட்டிங் காட்டுவித் தகப்ப டாமே
சேர்ந்துசேர் வறவே நிற்குஞ் சிவனைநீ யறிதி யென்றான்.

அறிவுமா யகண்ட மாகி யாதிகர்த் தாவு மாகிச்
செறிவுமா யுன்ற னுவிச் செம்மாந்த துணையு மாகிப்
பிறியுமா றிலாதான் றன்னைப் பிரித்துப்பே ரிருளே யாக்குங்
குறியில் ஆணவத்தின் செய்தி கூறநீ கேண்மின் என்றான்.

என்றபின் இங்கு நின்ற மலத்தினு லுனையி ழுந்த
உன்றன தன்மை யும்பின் னுனதிழப் பாகி நின்ற
தன்றிரு ளதனு லுண்டாந் துன்பமோ டின்பாற் கூடி
நின்றிடு மாயா பந்த வுடம்பையும் நிகழ்த்தக் கேணீ. 57

இன்றன வாக மாயா காரிய வுடம்பி லெய்திப்
பொன்றியும் பிறந்தும் வந்த பேதமை போக வுன்பால்
ஒன்றிய வருளா லீசன் உலப்பி லானந்த மெய்தி
நின்றிடா நிலையி னிற்பாய் என்றுதே சிகன் நிகழ்த்த. 58

மாணவன் றேசி கன்றன் வாசகங் கேட்டுச் சொல்வான்
காணலா மோநீர் முன்பு கட்டுரை செய்த மூன்றும்
தாணுவு மறிவும் பாசத் தன்மையு மூன்ற னுள்ளம்
பூணா முரைப்போ மென்று தேசிகன் புகலும் போதில்.

பரசிவன் ஆன்மாப் பாசம் எனப்பகர் மூன்றும் யான்நீர்
தருஞ்சொலே யன்றி வேறு சலமறக் கண்ட துண்டோ?
குரம்பையே காணுங் கண்டேன் ஆதலாற் குரம்பை தானும்
திருந்தவே யறிவ தெல்லா முயிருண்டேற் செப்பி டீரே. 60

உடலமே யுணரு மென்னி லுண்டிடுஞ் சோறு கையாற்
றொடவொணுச் சுட்ட தென்றுங் குளிர்ந்ததென் றறிந் துந் துய்த்தும்
கடனதாய்ச் செய்த தெல்லாங் காயமே பரிசித் தன்றோ
சுடுவதென் றதுவும் பின்னர்க் குளிர்ந்ததென் றதுவுஞ் சொல்லீர்.

காயமே யறியு மாகிற் பிணமானுற் கட்டை யின்கட்
டீயிலே மூழ்கும் போது சுட்டதென் றறிந்து செப்பிப்
போயிடக் கண்ட துண்டோ! ஆதலாற் புந்தி யில்லாய்!
காயமோ வறிய மாட்டா அறிவதொன் றுண்டு காணே. 62

அசைவினுற் பூதக் கூட்டத் தறிவெழு மென்பா லென்னின்
நசையில்வெற் றிலையும் பாக்குஞ் சுண்ணமும் நண்ணுங் காலத்
திசையவாஞ் செம்மை போலு மிறந்தபோ தறிய வேண்டும்
அசைவற் றொன்று போன போனது வாயுத் தானே. 63

பிறிந்ததோர் வாயுத் தானும் பெரியதோ ருறக்கந் தன்னிற்
செறிந்ததோ வில்லை யோதான் என்றுநீ தெளிந்து செப்பாய்
உறுந்தனி வாயு வுண்டங் குண்டாகி லுணர்வி லாதாய்
அறிந்திட வேண்டு மெல்லா மறியாமற் கிடப்ப தென்னே?

அறிவன் செவிதோல் கண்நா நாசிக ளைந்து மென்றாய்
அறிவிலாய் துயிலுங் காலத் தவைகள்விட் டகன்ற துண்டோ!
அறியுமோர் பொறியைத் தாக்க வறிந்ததே லிறந்த போது
செறிவுளோர் புரட்ட வீழ்த்தக் கிடந்தது தேர்ந்து கொள்ளே.

அறியுநாற் கரண மென்னிற் பற்றல் நிச்சயித்தல் ஆங்குச்
செறியவே யெழுந்திருத்தல் சிந்தித்தல் செய்வோ மென்று
அறியமாட் டாது கைத்தல் ஆதியாய் நான்கும் வேறே
அறிகின்றாற் போலக் கொள்ளாய் அறிபவன் கரண மன்றே.

தெரிதரு கரணம் நான்கின் செயலறிந் தோரொன் றாக
உரிமையி லடக்கி யாக்கி யிவைகளுட் கரண மாக்கி
விரிவுறக் கருவு தன்னிற் கூட்டியும் மீட்டுந் தானீர்
இருவகைக் கரண மன்றி யானென தென்ப தான்மா. 67

யானென தென்ன வான்மா வில்லைநீ ரியம்புந் தன்மை
தானுமுக் குணங்க ளாமக் குணங்கடன் றன்மை சாற்றில்
ஊனுடல் சித்த மீரு யொன்றிய வபிமா னந்தான்
ஈனமிலி ராச தத்தி னியல்பதே யாகு மென்றும். 68

ஈங்கிவை யனைத்து நீர்முன் னிழிக்கயா னிசைந்து வந்த
பாங்குசாத் துவித மென்று பகர்ந்தவை யொழிந்த காலை
யாங்குறு மயக்க மேதா மதமென்று மறிந்த விந்தத்
தீங்குறு குணங்க ளின்றிச் சேதன மில்லை யென்றான். 69

என்றமா ணகனை நோக்கி யிறையவ னருளிச் செய்வான்
நின்றமுக் குணத்தின் றன்மை நீயறிந் திடுகை யாலே
யொன்றமுக் குணநீ யன்றும் அவைக்குணர் விலாமை யாலே
சென்றுறு குணியுண் டென்று தேசிகன் செப்பச் சீடன்.

நீருரை செய்த விந்தத் திரிகுண நீக்கத் தன்னிற்
சார்தரு பிராண வாயுத் தானியங் கிடுத லாலே
சேர்தரு குணங்கள் போதச் சேடித்த பொருளாய்க் கண்டேன்
ஆர்தரு பிராண வாயு வதுமொழிந் தறிவ துண்டோ ?

பேசிடும் பிராண வாயு வறியுமென் றுரைத்த பேதாய்
தேசிலா வுறக்கந் தன்னிற் பிராணனும் வாயுச்சேர்ந்தங்(கு)
ஊசல்போ லுயிர்ப்ப துண்டோ வில்லையோ வுண்டுண் டாகில்
காசிபி னுக மேறி நடந்திடக் கிடப்ப துண்டே. 72

இன்னமுங் கேளு மெல்லாம் வேதிப் பிராண வாயு
மன்னிகின் றனைத்துங் காணு மனதிபேர் கருவி யாக
உன்னிய பிராண வாயு கரணத்தி லுணரா தென்கொல்
அன்னிய மாக நான்கும் அடங்கின வாறே காணும். 73

அவனியை யாளு மன்னன் அடன்மத மலையி னூர்ந்து
பவனிவந் துலாவும் போதிற் பரிகரங் கூடச் செல்லும்
உவமையாற் பிராண னிற்கக்கரணங்க ளொடுங்க வொண்ணு
இவைதனக் குயிர்வேந் தல்ல இவையுயிர்க் கடிமை யன்றே.

ஓதிய பிராண னீங்க வொன்றுமற் றிருந்தோன் றன்னை
நீதறத் தேர்ந்த வுண்மைத் தேசிக னருளிச் செய்வான்
ஏதனக் குற்ற செய்தி யினைத்ததே தியம்பா யென்ன
மீதுறு மிருளே யன்றி வேறிலை யிளம்பு கின்றான். 75

ஆதலா லபிமா னங்க ளைஞ்சு சோத் திராதி யைஞ்சாம்
ஈதிவை யுளதா யிற்றங் கவைகளெங் ஙனமோ வென்னில்
ஓதிய பொறிக ளந்தக் காணமுக் குணமு யிர்ப்பாய்
நீதக மிற்ற லஞ்ச நிகழ்ச்சியாஞ் சொல்லக் கொள்ளே. 76

ஐவகை யபிமா னங்கள் ஆகிநீ நிற்ற லந்தம் .
பொய்வகைச் சகல மென்றே புனிதன தருளாற் கண்டு
செய்வகை யாகி நின்ற கேவல நான்குஞ் சிந்தித்(து)
உய்வகை யுணர்ந்து கொள்நீ கேவலக் கிடையன்றுன்பால் 77

அஞ்சபி மானம் பஞ்ச வவத்தைகள் ... ...
... லநான் கொன்று கிடையதா மிதன்வீட்ட
வெஞ்சிய கருவி சாலம் போனதெங் ஙனமோ வென்னில்
வஞ்சக வுடல நீங்கப் பூதங்கள் மாளு மன்றே. 78

பொறிவிடப் புலன்கள்போகும் பொழுதெழு கரண மான
வறிவுறு கலாதி யஃக அருங்குண மூன்று மஃக
குறியுறு மகேச மீசஞ் சதாசிவங் கூட வாயுப்
பிறியவே விந்துப் பேர்ந்தாற் பெய்விட நாதம் பேரும். 79

தத்துவ சால மிந்தந் தன்மைகள் கழல மூல
மித்தையா மதீதத் தொன்றும் விளங்கிய தில்லை யென்ற
வத்தகு மாணன் றன்னை அண்ணல்பார்த் தருளிச் செய்ய
எத்தகை யானுந் தானுய் அறிவிலாய் இயம்பக் கேணீ. 80

பொய்யுடல் பஞ்ச பூதம் பொறிகர ணங்கு ணங்கள்
பெய்தரு பிராண ஞதி... னென் னும் பெற்றி
மெய்யருள் வழியாற் கண்டு விரியிரு ளதீத வீட்டி
செய்வினை யுடற்கட் டோயாச் சின்மய னுய நீதான். 81

தானெனு மவைமுன் னீயாய்ச் சார்ந்தெழு மபிமா னத்தால்
ஆனபொய் யறிவை மோகச் சகலமா மறிவாய்க் கண்டிட்டு
ஈனமா ரொழிவிற் போதந் தன்னையு மொருவி மூலப்
பான்மைவி லதீத போத மன்றுநீ பார்த்து... 82

போனவை யனைத்து நீயாய்ப் புந்தித்து வந்த போதந்
தானது சகல போகம் வேதனத் தன்மை யன்றும்
மானவை யொழிந்த போத மதுவுநீ யன்ற தீதத்
தினமா மயக்க போதத் திருளுநீ யல்லை யாகும். 83

இந்நிலை இழித்து வந்த தெவையும்யா னென்ற லானும்
பின்னையென் னுரைக்கி சைந்து பிராந்திநீ யொழித லானும்
தன்னிரு ளகன்று ஞானச் சொருபனி யாத லானும்
அந்நிலை யாவுங் கண்டே வறிவதான் மாவ தாகும். 84

அறிவிக்க அறிகை யானும் அறியாம லிருத்த லானும்
அறிவித்த வறியா மைக்கிங் கறிவுநீ யாத லானும்
அறிவித்த வென்னை நீயிங் கருளெனத் தெருள லாலும்
அறிவிக்க வறிவா னுப வறிவதான் மாவ தாகும். 85

வடிவறும் வடிவி லன்றி வடிவரு துயிரினுண்மை
வடிவிலே நின்று லென்றும் வடிவமே யானுற் போல
வடிவிலா வடிவி னின்றுல் வடிவிலா வடிவே யாவை
வடிவிலே நின்று லென்றும் வடிவரு மதித்துப் பார்நீ. 86

எண்ணிலுன் னியல்பு தன்னை யின்னமுங் கேட்டியாகில்
விண்ணுமுன் கண்ணும் போலும் என்றுனை விளங்கிக்கண்டிட்
டுண்ணிறை பொருட்கு முன்பால் ஒன்றிருள் தனக்கு நீயே
கண்ணென வருளாற் கண்டு காரிருள் கழிய நில்லே. 87

என்றுதே சிகனி யம்பி யிங்குநீ யொழித்த வெல்லாம்
நின்றுபா ரென்ற போத ஞேயமே யன்றி வேறு
சென்றவப் பொருள்க ளொன்றுங் கண்டிலே னென்னத் தேவன்
உன்றன தறிவின் மூலை யொருமருங் கிங்குண் டென்றுன்.

யாவுமாய் நின்ற போத மன்றியே யிதற்கு மேலோர்
தேவுள தென்று நின்ற செவ்வியை யலைக்க வேண்டா
வாவியே கர்த்தா வாகு மதுகர்த்தா வானதன்மை
நீவகுத் துண்மை யாயே யெனக்குநீ நிகழ்த்தி டாயே. 89

அறிதாக் கருவி யுண்டிங் கறிபவ னனபின்னை
செறிதாக் கர்த்தா வென்னை நீகருத் தாவே யானுற்
செறிசுக துக்க மென்னுன் செய்தவெள் ளாண்மை யுண்டென்
றறிதாய் முற்செய் கன்ம மதுவேயாய் வாழு னுண்டேல்.

ஒருவனோர் பொருளை யுன்கை யுய்த்தன னிரவி லந்தப்
பொருளையோர் கள்வ னெய்திப் போதலாற் புலர்ந்த காலை
வெருவா விழிப்ப தன்றி வேறுண்டோ வுனக்கு மந்தக்
கரணங்கள் வசத்த தாகக் கண்ணுத லடிமை நீயே. 91

இன்னுமுன் றன்மை சொல்லி லின்பத்துன் பங்கள் மாறி
மன்னிநின் றவைகள் துய்க்கும் வகையின்மேல்வருவனாடாய்
சொன்னசுல் லின்ப மொன்றுந் துய்த்தநீ துன்பந் தன்னை
யன்னியீ மாக்கி டாதே யலந்துநீ யருந்த லென்னே. 92

இதற்குவே றுரையொன் றின்றி யிருந்தவன் றன்னைப் பார்த்திட்
டதற்குவே றுரையுண் டாகில் அறைந்திடா யென்ன வண்ணல்
பதைப்பற விருந்த மாணன் அறிவிலே பதியைக் காட்டக்
கதித்தெழு மருளா லங்கோர் உவமையாற் கட்டு ரைப்பன்.

இரும்பொடு காந்தக் கல்லின் இருமுக வொருவ னின்று
பொருந்தவே பிடித்தாற்காந்த மிரும்பினைப் போதவாங்கும்
பொருந்திட வொருவன் வைத்தாற் போலவுன் கன்மந் தன்னை
வரும்பரு வத்தி லூட்டி வளர்த்துவான் ஒருவன் வேண்டும்.

என்றவன் றனக்கிங் குள்ள சுதந்தர வீனந் தன்னை
யொன்றுமற் றிவனே முன்னின் றுரைத்திட விவனு ரைப்பான்
என்றன துட்பு றம்பா மிரண்டினி லெவற்றின் பால்நீர்
நின்றுணர்த் திடுவீ ரென்ன நின்மல னருளிச் செய்வான்.

உள்ளுமாய்ப் புறத்து மாய்நின் றுணர்த்துவோ நாமென் றுண்மைத்
தெள்ளிய வருளி னாலே தேசிக னருளிப் பின்னும்
ஒள்ளிய தன்மை யோடு முன்னிலை படர்க்கை யுற்றே
நள்ளுற நடத்து வோம்நாம் என்றவ னவிலுங் காலை. 96

பரவிய தன்மை யாதி மூன்றையும் பகரு மென்ன
விரவிய விச்சா ஞானக் கிரிகையுள் விளைத்தல் தன்மை
யுரவுமுன் னிலையு ரைக்கில் அவனவ ளதுவா யூட்டல்
விரவிய படர்க்கை யிந்த விரண்டினுந் தட்டா மெய்ம்மை.

முன்புநீ நின்ற வதத் தன்மை முன்னிலை படர்க்கை
யென்பதிங் கிவையாய்க் கண்டிட் டிறையவ னருளினாலே
யின்புறு முத்திக் கண்ணில் இவ்வகை மூன்று முன்பால்
துன்பற நடத்துந் தன்மை சொல்லநீ கேண்மி னென்றான்.

நீயறச் சிவமாய் நிற்றல் இடையறு நிகழ்ச்சி தன்மை
யாயமுன் னிலையு ரைக்கில் அகிலமுஞ் சிவமாய்த் தோன்றல்
மேயவப் படர்க்கை சொல்லின் விளம்பிய விரண்டு மொன்றாய்
ஏயவா னந்தா தீத நிறைவிலா நிறைவா மென்றே. 99

சரகுரு நிகழ்த்த லாலித் தொகுதிமுன் கண்டு சென்ற
வுரவுறு மாணன் றன்னை நோக்கியுத் தமனு ரைப்பான்
விரவிய வுபாதி நாம்முன் வேறிடக் கூறு செய்த
மரபுனக் கேற வுன்பால் வாய்த்ததோ வென்ன மாணன்.

காயநா னன்று பூதக் கட்டுநா னன்று பின்னை
மேயவைம் பொறிநா னன்று மிக்கநாற் கரண நானன்(று)
ஏயுமுக் குணம்பி ராணன் யாவுநா னன்று மென்ற
ஞேயமே நீகா ணென்ற நின்மலா போற்றி போற்றி. 101

என்றுவீழ்ந் திறைஞ்சி யெந்தை யிணையடி தலைமேற் கொண்டு
தூன்றிய புளகம் பொங்கக் கண்கனீர் சொரிய வன்பு
குன்றுபோல் வளர வுள்ளங் குதுகுதுத் தழிந்தெ ழுந்து
நின்றவன் றன்னை நோக்கி நின்மல னருளிச் செய்வான்.

அளவிலா வருளி னாலே யவன்றனைப் பார்த்து னக்கிங்
குளவெலா மொழித்த பின்னை யொன்றுமற் றிருந்த செய்தி
தெளிவதா னந்த மாய சிவம்வினை பூமி யந்த
விளைவெலா முனக்கு ரைப்பம் விரும்பிநீ கேண்மி னென்றான்.

நீயற நிறைந்து நின்ற நின்மல போதந் தானே
யாயமெய்ப் பரையா மென்றே யவன்றனக் குறுஞா னக்கண்
மேயநற் கிரிகை யிச்சை யறிவினில் வீடுங் காட்டித்
தோய்வறத் திரோதம் போக்கிச் சுத்தபூரணனாய் வைத்தான்.

வைத்தபின் பரைக்கு வேறு பரையில்லை யென்ன வைத்திட்
டத்தகு பரையே யாக்கி யநுபவச் செய்தி செய்து
சித்தமா னந்த மான ஞேயத்தி னுதிப்பித் தங்கண்
உய்த்தபே ரின்பக் காட்சி யொழித்தநி லமூர்த்த வித்தான்.

எல்லையிற் பரமா னந்த வின்பத்து ளழுந்தி யந்த
எல்லையுங் கீழுமேலு நாப்பணு மிழித்திட் டின்ப
எல்லையே யெங்கு மாக வின்புக்கின் புறவே வைத்துப்
புல்லுத லற்ற வின்பம் பூரண மாகச் செய்தான். 106

ஓரின்ப மான விந்த வொழிவிலா நிறைவு தானும்
பேரின்ப சத்தி யாநீ பெற்றதுஞ் சித்தி முத்தி
பேரின்பா தீத மாய பெருமைபே றிரண்டு மற்றுச்
சீரின்ப மயமாய் நின்ற செய்திநீ யெய்தி டென்றான். 107

தன்னையுந் தன்ன தோராத் தன்னையு மொருதன் மைத்தாய்த்
தன்னறப் பெற்றோர் காணத் தாவில்பே ரின்ப சத்திக்
கன்னிய மாயி னோர்கள் ஆதலா லின்பா தீத(ம்)
உன்னிலே பெற்றி லன்றி யுற்பவ முனக்க றாதே. 108

ஒன்றுமற் றிரண்டு மற்றங் கொன்றிரண் டதுவு மற்று
நின்றுநீ யழுந்த லற்று நீயல தானு மற்றுச்
சென்றுநீ சிவமாம் தன்மை சிவநீயாந் தன்மை தானும்
அன்றியா ணவமி லாத வாணவ ராகி நில்லே. 109

சுகிசுக மிரண்டு மற்ற சுகாதீத வுண்மை தன்னிற்
றகுசிவம் பெறுவான் பாசங் கெட்டவன் சைவ னன்றோ
மிகுஞ்சிவ வினைவு தேவாம் வினைவுக்கு வினைவி லாத
பகுதிநீ பாச மென்மேற் பரபோக முடிவி லாமை. 110

மும்முத னித்தங் காண்டல் முடிவிலா முதனி யாகும்
செம்மைகா ணென்ன வைத்துச் சிவமுனைக் கெழும லுற்று
மெய்முத னீயாய் நிற்றல் வீட்டியச் சிவமாய் வாழ
விம்முத லிழப்பு நாளு திருப்பதே யின்பா தீதம். 111

சித்திலே சிவமொ டுங்கச் சிவத்திலே சித்தொ டுங்க
வுய்த்தவிவ் விரண்டு மற்ற வுண்மையே வுண்மை யாக்கி
அத்தகு சிவமே வாழு மதுவுன துண்மை யென்றே
வித்தக வேத சைவம் மயக்கற விளம்பு மன்றே. 112

இவனவ னருக் தன்மை யெய்துமற் றின்பா தீதம்
அவனிவ னருக் தன்மை யதுவுமற் றளவி றந்த
அவனவ னருக் தன்மை யவன்றனிற் கண்ட வுண்மை
அவனவ னகா முத்தி யதுசிவ முத்தி யாமே. 113

அப்பொரு ளிருந்த தன்மை யதுமுதற் றுவிதங் கூறின்
அப்பொரு ளுதய மூன்று மதுவிதற் கின்மை நான்காம்
அப்பொரு ளறிவு வீடல் அஞ்சவத் தறையுங் காலை
அப்பொருட் களவு காணு வநுபவ வளர்ச்சி யாமே. 114

அநுபவந் தனுவ தாகி யழியுமாப் போற்சி வன்பால்
அநுபவ மந்த நாளைக் கழிவுகைம் மாற தாக்கி
அநுபவ காயங் கொண்டே யநுபவ விழப்பு வாழ
அநுபவப் புலவி யாரு ரருணிலைக் குரியோர்க் காமே. 115

வெற்றுடல் திரிந்த போகமேலொடு கீழு மற்றுச்
சுற்றொடு நடுவு மற்றுச் சுகபரி பூர ணத்தே
யுற்றிட லொழித லற்றிக் குலப்பி லானந்த மாய
தற்பர மொழிந்து நிற்பர் தற்பர மொழிந்தோர் தாமே. 116

சிலமெய்த் திருவே டத்தின் செய்தியுஞ் சிவாலயத்தின்
பாலுறை வடிவுந் தன்பால் பயன்படுஞ் சிவமாய்க் கண்டிட்
டோலமிட் டுருகிக் கண்ணீ ரொழுகநெக் குருகு முட்சேர்
கோலமே கோல மாவர் குறைவிலா நிறைவி னரே. 117

முடிவுறு முடிவில் வைத்த முன்னவன் பாதம் போற்றி
யடியொடு முடிவி லின்பாம் அருளருட் சரணம் போற்றி
வடிவெடுத் தென்போல் வந்த வளர்பெருங் கருணை போற்றி
படிமிசைப் பயின்ற வுண்மைப் பதாம்புயம் போற்றி போற்றி.



சாது அச்சுக்கூடம், மயிலாப்பூர், சென்னை–4

பக்கம் 94. மோக்ஷம் ஞானத்தாலும், யோகத்தாலும், பக்தியாலும் அடையலாம். ஞானத்தை அடைவதற்குச் சைவர்கள் நான்கு மார்க்கங்களைத் தெரிந்துள்ளார்கள்: ஆலயப் பணி (சரியை), வழிபாடு (கிரியை), ஆன்மப் பயிற்சி (யோகம்), மெய்யுணர்வு (ஞானம்). வைணவர்கள் (பிள்ளை லோகாசாரியர்படி) ஐந்தாகக் கற்பிக்கிறார்கள். வைணவமும் சைவமும் இறைவனிடத்தில் பக்தியையும், பிரபத்தியையும் வற்புறுத்துகின்றன.

பக்கம் 40. சமய வரலாறுகளில் உணரப்படும் முக்கிய உண்மை 'தீக்ஷை' ஆன்மவளர்ச்சிக்கு அவசியமானதென்பதாகும். அதை மிசபடோமியாவில் 'இயா', இகிப்தில் 'டோத்', கிரீஸில் 'ஹார்மிஸ்', சைவத்தில் 'ஞானசிரியன்', பௌத்தத்தில் 'போதி சத்துவம்' எனப் பலவாறாகக் கூறுகிறார்கள்.

டாக்டர் வாக் சமய உணர்ச்சி மூன்றுவகைகளில் வெளியாகிறது என்று பாகுபாடு செய்துள்ளார். அவைகள் (1) சிந்தனை (அதாவது, கொள்கைகள்), (2) செய்கை (அதாவது, வழிபாடு), (3) சேர்க்கை (அதாவது, அடியார் இணக்கம்). இந் நூலாசிரியர் கருத்துக்கள் சைவ சித்தாந்தத்தை ஒட்டியிருக்கின்றன. நூலாசிரியரின் சித்தாந்த ஈடுபாடு பற்பல இடங்களில் நன்குவெளியாகிறது. அவர் கூறும் மெய்யுணர்வு முறைமை (Religionschaft) சித்தாந்தத்தில் கூறப்படும் 'தசகாரியம்' என்பதற்கு ஒத்ததாக இருக்கிறது. 'தசகாரியத்தைப்' பற்றி அவர் அறிந்திருந்ததால் அவர் முழு வியாசமும் அதன் விளக்கமாக இருந்திருக்கவும் கூடும்.

சைவத்தின் திறனை மேல்நாட்டாருக்கு எடுத்துரைக்க ஒரு ஆங்கிலப் பத்திரிகை தேவையென யாம் கருதுகிறோம். மறைந்துபோன 'சித்தாந்த தீபிகை' புத்துயிர் பெற்று மீண்டும் நிலவ இறைவன் அருள்புரிவாராக. —நல். மு.

---

திருமுறை அருச்சனை: சிவபெருமான், முருகன், உமையம்மை முதலினோர் "தண்டமிழ் அமிழ்தம் கூட்டுண எழுந்த வேட்கையால்" சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்த மதுரையில், ஆலவாய் அண்ணல் அங்கயற்கண்ணி ஆலயத்தில், 4-10-61 புதன்கிழமை யன்று மாலை 8 மணியளவில்,

தமிழ் மாநில அறநிலைய அமைச்சர் கனம். பக்தவத்சலனார் அவர்கள், தமிழவேள் சர். பி. டி. இராஜன் எம்.எல்.சி. அவர்களின் தலைமையில், திருமுறை அருச்சனையைத் தொடங்கி வைத்தார்கள். திருவண்ணாமலை ஆதீன மகாசந்நிதானம் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் அவர்கள், தமிழகத்துத் திருக்கோயில்களில் திருமுறை அருச்சனையை அமைச்சர் அவர்கள் தொடங்கி வைக்கும் செயல், அபயகுல சேகர சோழ வேந்தனுக்கு ஏறத்தாழ ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின், சைவத் தமிழ் மக்களின் வரலாற்றிலே ஒரு பெருஞ் சிறப்பு நிகழ்ச்சியாகும் என்று குறிப்பிட்டு, வாழ்த்துரை வழங்கினார்கள். தமிழகம் எங்கணும் இருந்து அருள் நெறியன்பரும், திருமுறைச் செல்வர்களும் பெருந்திரளாக இவ் விழாவிற்குச் சென்று கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

---



---

Printed at the Sadhu Press, 15. Madhava Perumal Koil Street, Mylapore by D. Mangayarkarasi and V. K. Punithavathi. Edited by Pulavar Murugavel, M.A., M.O.L. & Published by S. Satchidanandam Pillai, B.A., L.T. for the Saiva Siddhanta Maha Samajam, 14, Warren Road, Mylapore, Madras-4.